முகப்பு:

விநாயகர்

# திருக்கோயில்

மாலை: 21 ‖ சித்தார்த்தி ஆண்டு - ஆவணித் திங்கள்—ஆகஸ்ட்-1979 ‖ மணி: 11

## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்!

திருக்கோயில் திங்கள் இதழின் சந்தாதாரர்களாகச் சேர விருப்பமுள்ளவர்கள்,

ஆணையர் அவர்கள்,
அறநிலைய ஆட்சித்துறை,
சென்னை — 600 034

என்ற முகவரிக்கு மணியார்டர் மூலம் பணம் அனுப்பிச் சந்தாதாரராகச் சேர்ந்து கொள்ளலாம்.

ஜனவரி முதல் டிசம்பர் வரை உள்ள காலம், சந்தா ஆண்டு எனக் கணக்கிடப்படும். இடைப்பட்ட காலத்தில் சந்தாதாரராக விரும்புவோர், முழு ஆண்டிற்குரிய சந்தாத் தொகை ரூ. 15—00 உடன், இடைப்பட்ட காலத்தில் உள்ள மாதங்களுக்கு, ஒரு இதழ் ரூ. 1—25 வீதம் சேர்த்துப் பணம் அனுப்பிச் ''சந்தாதாரர்'' ஆகலாம்.

தனிப்பட்ட 'சந்தாதாரர்கள்' ஒவ்வொருவரும் நேரடியாக, ஆணையர் அலுவலகத்திற்கே மணியார்டர் மூலம் பணம் அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

பழைய சந்தாதாரர்கள், கடிதம் எழுதும் பொழுதும், பணம் அனுப்பும் பொழுதும், தங்கள் சந்தா எண்ணையும் தவறாமல் தெரிவித்து உதவினால்தான், உடனுக்குடன் ஆவன செய்ய வசதியாக இருக்கும். புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பும்பொழுது, மணியார்டர் கூப்பனில், புதிய சந்தா என்பதைக் குறிப்பிடுமாறும், சரியான முழு முகவரியைப் பின்கோட் [PINCODE] எண்ணுடன் தெரிவிக்குமாறும், கேட்டுக்கொள்ளப்படுகிறது.

வெளிநாட்டுச் சந்தாதாரர்களின் முகவரிகள் அனைத்தும் செவ்வனே பதிவு செய்து வரிசைப் படுத்தப் பெற்று அவர்கள் எல்லோருக்கும் முறையாக இதழ்கள் அனுப்பப்படுகின்றன. தற்பொழுது வெளிநாட்டுச் சந்தாதாரர் ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு அஞ்சல் செலவு மட்டுமே ரூ. 9—60 ஆகின்றது. ஆதலால் வெளிநாட்டுச் சந்தா, ரூ. 20—00-ல் இருந்து ரூ. 25—00 ஆக ஜனவரி 1978 முதல் மாற்றி அமைக்கப்பட்டது. வெளிநாட்டுச் சந்தாதாரர்கள் அவ்வப்போது தங்கள் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளக் கேட்டுக் கொள்ளப்படுகின்றனர்.

## பொருளடக்கம்



ஆசிரியர்: ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

இந்து சமய அறநிலைய (ஆட்சி)த் துறை வெளியீடு

# செய்யாமற் செய்த உதவி

டாக்டர் கு. திருமேனி, எம்.ஏ., பிஎச்.டி.,
முதுகலைப் பேராசிரியர், தேசியக் கல்லூரி, திருச்சி.

''செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது'' (குறள் 101)

என்பது எல்லோரும் அறிந்த குறள்.

பரிமேலழகர் இதற்கு உரை கூறும்போது ஒருவன் தனக்கு முன் ஓர் உதவி செய்யாதிருக்க அவன் அவனுக்குச் செய்த உதவிக்கு மண்ணுலகும் விண்ணுலகும் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஒத்தல் அரிதாகும் என்பார்.

சிறப்புரையில் ''கைம்மாறுகள் எல்லாம் காரணமுடையன, ஆதலின் காரணமில்லாத உதவிக்கு ஆற்றாவாயின என்றும், செய்யாமைச் செய்த உதவி என்று பாடமோதி 'மறித்துச் செய்யமாட்டாமை உள்ளவிடத்து செய்த உதவி' என்று உரைப்பாரும் உளர்'' என்பர். இவ்வாறு எழுதியது கொண்டு பார்க்கும்போது, செய்யாமற் செய்த உதவி என்பதற்குப் பொருள் கொள்வதில் கருத்து வேறுபாடும் சிக்கலும் இருத்தல் போதரும்.

''பொருளற்றார் பூப்பர்'' ஒரு காலாதலின், அவர் பொருள் பெற்றுழி நன்றிக் கடனாற்றுவராதலின், மறித்துச் செய்யமாட்டாமை என்ற உரையும் அமையாது. பரிமேலழகர் உரையின்படி செய்யாமற் செய்த உதவியைக் காரணமில்லாமல் செய்த உதவி என்று பொருள் கொண்டால் உதவியெல்லாம் காரணமுடையதாதல் வேண்டும். அஃதாவது கைம்மாறோ, புகழோ, பிறிதொன்றோ கருதியதாதல் வேண்டும். அதனால் அவ்வுரையும் அமையாது.

அவ்வாறாயின் இதனை அறஞ்செய்தலுள் படுப்போமெனின் அறஞ் செய்தலினும் இது அடங்காது. காரணம் அறம் செய்தானுக்கு அது பயன் தருவது. இதனைச் ''சிறப்பீனும் செல்வமும் ஈனும், அறத்தின் ஊங்கு ஆக்கமெவனோ உயிர்க்கு'' (குறள். 31) என்பர். அவ்வாறாயின் இதனை ஒப்புரவில் அடக்கலாம் என்றால் அதுவும் ஒருவாறுதான் அமையும்.

'கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு' (211)

என்பது குறள். இவ்வொப்புரவு என்பது ஒருவனுக்குக் கடமையாகி அக்கடமை பிறரிடம் கைம்மாறு நோக்காததாகின்றது. மழை தன் கடமை தவிர்த்தால் அது உள்ளற்குரியதாகும். கடப்பாடுடையார்க்கு இது பொது.

''சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து'' (1010)

ஞாலமோ கொடாரைப் பழிப்பதாகும். கடமை ஆற்றுவது கைம்மாறு கருதாததாகி விடாது. மழைபெய்தல் என்பதோ இயற்கை நியதி. ஒப்புரவாளனுக்கும் இது பொது. அதுபோல மனிதனும் பிறர்க்கு ஒப்புரவு செய்வதைக் கடப்பாடாகக் கோடல் வேண்டும். மழைக்கு இடவரையறை இல்லை. ஒப்புரவாளனுக்கும் அங்ஙனமே. இன்னும் மழை வேண்டப் பெய்வதும் ஆணையுட்பட்டதும் ஆகும். அன்றியும்.

''உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்'' (480)

என்பதால் ஒப்புரவிற்கும் அளவுண்டு. ஆனால் உதவியுள் அடங்காது.

இவ்வாறாயின் இதனை ஈகையுள் அடக்கலாமெனில் இது புகழ் கருதியும் அன்று. புகழ் எனினும் அதுபயனால் முடிதலின் அது கூடாது. கடப்பாடும் பயன் கருதாமையும்காணும்போது உதவி என்பது ஈகையும் புகழும் ஒப்புரவும் அன்று. கடமையாகக் கொள்ளும் ஒப்புரவும், பயன் ஈதல் ஆதலின் அதனால் நிகழும் ஈகையும், வாழ்வில் பெற்றே தீரவேண்டிய புகழும் இன்றி, இந் நன்றியறிதல் என்பது கட்டுப்பாடற்றுத் தானே இயல்வது.

''பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின்
நன்மை கடலிற் பெரிது'' (103)

என்ற இதனை வேண்டுமாயின் ஒப்புரவுள் அடக்கிப் பார்க்கலாம். 'கைம்மாறு வேண்டா' என்பதும் 'பயன் தூக்கார்' என்பதும் ஒன்றே. அதனால்தான் உலகால் மீட்டுச் செய்யமாட்டாத ஒப்புரவு போன்று, பெரிது என்றது போன்று இதனையும் கடலிற் பெரிது என்றார். ஆனால் உதவியவன் பயன் தூக்காது செய்தாலும் உதவி பெற்றோன் சால்பிற்குத்தகப் பயன் தர வல்லது.

''காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது''

என்பதும் ஒன்று. அன்றி உதவி பெற்றான் மாற்றுதவி செய்யவும் வாய்ப்புண்டு. இது அதனால் ஒப்புரவில் அடங்காது. இது ஒருவன் ஒருவனுக்கு உதவி வேண்டுங் காலத்துச் செய்த உதவியாகும். இடையறவுபடாது கடமையாகச் செய்யும் ஒப்புரவு போன்ற தன்று இது. இதனைக் கைம்மாறு கருதாது என்று கூற முடியாது. கைம்மாறு காட்ட வாய்ப்புடையது உதவிய காலத்து அருமை நோக்கி இதனை ஞாலத்திலும் பெரிதென்றால். ஒப்புரவு என்பது உலகு, கைம்மாறு, காட்டமுடியாத அளவிற்குப் பெரிது என்றார். காலத்தால் செய்த உதவியை உலகைவிடப் பெரியது என்றார். பயன் கருதாதும் செய்த உதவியைக் கடலை விடப் பெரியது என்றார். ஆனால் செய்யாமற் செய்த உதவிக்கு மண்ணும் விண்ணும் கைம் மாறாக வழங்கப் பெற்றாலும் ஒப்பாக அமை யாது என்கின்றார். அன்றியும் ஈகையுள்ளும் கைமாறு வேண்டாததுண்டு.

'வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை மற்றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து''.

இவ்வீகை வறியார் அறிய வழங்குவதாதலின் அவ்வறியார் கடப்பாட்டிற்குரியவர். அதனால் இது உதவியுள் அடங்காது.

அப்படியானால் செய்யாமற் செய்த உதவி என்றால் அதற்கு என்னதான் பொருள் கொள்வது. வாழாது வாழ வைத்தல், நோவாது நோவ வைத்தல், கொல்லாமற் கொல்லல் என்று கூறும் மரபுண்டு. இவையெல்லாம் முரண்பட்ட சொற்றொடர்கள். இவைபோன்றே 'செய்யாமற் செய்த' என்பதும் முரண்பட்ட சொற்றொடர். சொற்றொடரில் முரண் இருந்தாலும் பொருள் முரண்படப் பயந்தாலும் பொருளற்ற சொற்றொடர் என்று ஒதுக்கி விட முடியாது. அத்தகைய சொற்றொடரில் ஆழ்ந்த, பொருளுண்டு. வள்ளுவர்இதுபோன்று 'உளதாகும் சாக்காடு' என்பர். 'தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எந்நாளோ' என்பர் தாயுமானவர். இவற்றைக் கொண்டு பார்த்தால் கொடுக்காமல் கொடுத்த கொடை போன்று இதனைச் செய்யாமற் செய்த உதவி என்கின்றார் எனலாம்.

இரவச்சம் என்ற அதிகாரத்தில் செய்யாமற் செய்த உதவிக்கு விளக்கம் தருகின்றார். இரவு என்பது ஒருவன் ஒருவனிடம் வேண்டப்படும் உதவி. அது ஆவிற்கு நீரென்று இரந்தாலும் இழிவுடையது. இதனால் தனக்கு ஓர் உதவி வேண்டுமென்று பிறரிடம் இரத்தல் இழிவுடையதாகும். நல்குரவு தலைப்படுமேயானால் அது நல்லகுடிவழிப் பிறந்தாரையும் துளக்கும்.

''இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும்.'' (1044)

இளிவந்த சொல் என்பது, தமக்கு ஒன்று ஈயென்று கேட்கும் ஒரு நிலை.

''இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு.'' (1064)

இச்சிறப்பு வையகத்திடமும் வானகத்திடமும் அடங்காப் பெருமை படைத்தது. இந்த நிலை யுற்றபோது,

''மருந்தோ மற்று ஊனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து'' (968)

என்ற முறையில் தன் உடல் பேணாது, அது வழி உயிர் பேணாது இறக்கத் துணிந்து இடனில் பருவத்தனாதல். இந்த இரவொல்லாச் சிறப்புடைய கோட்பாடுடையானுக்கு ஒருவன் உதவி செய்தது போன்றில்லாமல் தன்னை மறைத்து, அவன் அவ்வுதவி செய்தலை அறிந்தால் மானங்கருதிப் புறக்கணிக்கவோ, மீண்டும் மாற்றுதவி நினைக்கவோ செய்யவோ இடந்தராமல் தெய்வக் கொடைபோல் மருட்கை பிறக்கும் வழி வழங்குவதையே செய்யாமற் செய்த உதவி என்றார்.

இடமெல்லாம் என்பது வையகத்திடமும் வானகத்திடமும் சேர்ந்து அடங்கப் பெற்றது. இப்பெருமை ஒருவன் ஒருவனிடம் இரவாமையால் வருவது. இதுபோன்றே வையகமும் வானகமும் ஆற்ற அரிதாகிய உதவி என்பதும் ஆகும்.

செய்யாமற் செய்தல் என்பது ஒருவர் இயற்றாது இயல்வது. கருத்தன் இன்றிக் காரியம் இயலாது. அதனால் செய்யாமற் செய்வது என்பது அமையாது. ஒருவன் செய்த காரியமாகிய உதவியைப் பெற்றவன் கருத்தனை அறிய முற்படின் அவனுக்குத் தன்னை முற்றிலும் மறைத்து மாயம்போல் நின்று செய்வது. உதவி பெற்றவன் உதவியோனை அறியாதபோது அதனைத் தெய்வச் செயலாக நினைந்து வாளா ஒழிவானேயன்றி அவ்வுதவிக்கு மாற்றுதவி செய்ய முற்படமாட்டான். இவ்வாறு அருளாளனாய் ஒருவனுக்கு, ஒருவன் தன்னை மறைத்து உதவி, அதனால் தனக்கோர் உதவி பெறாதவகைச் செய்வதைச் செய்யாமற் செய்த உதவி என்றும், அதற்கு வையகமும் வானகமும் இரண்டும் கடப்பாடு ஆற்ற இணையாகா என்றும் கூறுகின்றார்.

காலத்தினால் செய்த ஞாலத்தின் மாணப் பெரியதாகிய உதவியைக் காட்டிலும், செய்யாமற் செய்ததை வையகமும் ஆற்ற அரிது என்பதால் இதனை முதலில் கூறினார். இதற்குத்தான் உதவி என்று பெயர். மற்றவை உதவிதான் எனினும் இதனிற் சிறப்புடையன அல்ல என்பது அவர் துணிபு.



# கடவுள் நெறி

'திருக்குறள்மணி' பேராசிரியர்,

திரு. க. த. திருநாவுக்கரசு, M.A., M.LITT.,

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20

இந்தியாவின் தனிப்பெருஞ் சிறப்பு, அத னுடைய ஆன்மிக வாழ்வில் அமைந்து உள்ளது எனலாம். மனிதன் தன் உள்ளத்தாலும் அறி வாலும், புலனுகர்ச்சிக்கு அப்பாற்பட்ட பொரு ளாக-'அப்பாலைத் தத்துவமாக' - உள்ள இறைவனுடைய அருட்பேற்றில் மூழ்கி, ஆன் மிக (அமைதி) அனுபவத்தைப் பெறுவதையே ஆன்மிக வாழ்க்கையின் முதன்மையான நோக்க மாகும். இத்தகைய ஆன்மிக அனுபவத்தைப் பெற்ருேர், 'உள்ளொளி'யின் வழிநின்று, மனி தகுலம் 'மண்ணில் நல்லவண்ணம் வாழ' வழி காட்டி வருகின்றனர். அவர்கள் காட்டிய வழியே-காட்டிவரும் வழியே 'சமயம்' எனப் போற்றப்படுகிறது.

**சமயம்:**

பொதுவாக 'மதம்' எனும் சொல்லை நாம் பெரிதும் பயன்படுத்தி வருகிருேம். இந்த வடமொழிச் சொல்லிற்குப் புனிதமான ''கொள்கைகள், கோட்பாடுகள்'' என்பதே பொருளாகும். 'சமயம்' எனும் மற்ருெரு சொல்லும் தமிழில் வழங்கிவருகிறது. இத னைத் தமிழ்ச் சொல்லாகவே கொள்ளலாம். 'சமை' எனும் பகுதியடியாக அமைந்த சொல் இது. 'சமைத்தல்' என்பதற்குப் 'பக்குவப் படுத்துதல்' என்பது பொருள். உலக வாழ்க் கையில் ஆன்மாவினைப் பக்குவப்படுத்தும் நெறிக்கே, 'சமயம்' எனும் பெயர் அமைந்த தாகத் தோன்றுகிறது.

> நவையறு நன்பொருள் உரைமினேவெனச்
> சமையக் கணக்கர் தந்திறஞ் சார்ந்து

எனும் மணிமேகலை அடிகளால், சமய தத்து வங்களில் வல்லவர்கள் பலர் அக்காலத்தில் வாழ்ந்ததை அறிகிறோம்.

**ஒழுக்கநெறி:**

திருவள்ளுவர் காலத்தில் சமயத்திற்கு வேறொரு பெயர் வழங்கியதாகத் தெரிகிறது. 'பொய்தீர்' ஒழுக்க நெறி' (திருக்.6) என்பது திருவள்ளுவர் சமயத்திற்குக் கொடுத்துள்ள பெயராகும். நெறி என்பது என்ன? 'நெறி' எனும் சொல்லிற்கு ''வழி, கொள்கை, ஒழுக்கம் பயன், சிறப்பு'' எனும் பல பொருள்கள் வழங்கி வருகின்றன. பொதுவாக அறவழியை

> சான்றோர் சென்றநெறி (புறம்.134)
> சிறப்புடை மரபு (புறம்.31)
> நல்லாறு (புறம்.195: குறள் 324)

எனப் பலவாறாகச் சுட்டுவது வழக்கமாகும். 'அறநெறி' 'நன்னெறி' என்பன உலக வழக்கா கும். வடமொழியில் 'மார்க்கம்' எனவும், ஆங் கிலத்தில் வே (Way) எனவும் இதனைச் சுட்டு வர்.

'சமய நெறி காணாத காட்சி' எனவும், 'நன்னெறியாம், மெய்யறிவு பெறும் பேறு' எனவும் தாயுமானவர் சமயத்தைப் போற்று வர். 'மார்க்கம் எலாம் ஒன்றாகும்' எனும் திருவருட்பாவின் பாடற்பகுதியில், 'மார்க்கம்' எனும் சொல்லை, இராமலிங்க அடிகள் 'சம யம்' எனும் பொருளில் பயன்படுத்தியுள்ளார்.

'பொறிவாயில் ஐந்தவித்தானுடைய' 'பொய்தீர்' ஒழுக்கநெறி' யாகத் திருவள்ளுவர் 'சமயத்' தினைப் போற்றுகிறார். அது 'மெய் யான ஒழுக்க நெறி'. இதனால் ஒழுக்கத்தின் அடிப்படையில் சிறந்து விளங்குவதே 'சமயம்' என்பது புலனாகின்றது.

**இறைவனிடம் இணைப்பது:**

ஆங்கிலத்தில், சமயத்தினை 'ரெலிஜன்' (Religion) என்பர். அதற்கு 'இணைப்பது, ஒன்று சேர்ப்பது' என்பது பொருள். இப்பொரு ளின் அடிப்படையில் ''மக்கள் உள்ளங்களை இறைவனிடத்து இணைப்பது சமயம் - மக்க ளுடைய உணர்வையும் உயிரையும், அறிவையும் ஆற்றலையும் இறைவனிடத்தில் ஒருமுகப்படுத் வதே சமயம்' என விளக்கம் தந்தார்.

அண்மைக் காலத்து வாழ்ந்த மேற்கு நாட்டு அறிஞர் பெர்க்சன் (Bergson). ''தனி மனிதனுடைய சிறப்புமிகு மதிப்பையும், பெருந் தன்மையையும் கண்டறியும் முயற்சியை அடிப் படையாகக் கொண்டதே சமயம். மற்றும், மெய்ப்பொருளோடு அவனவன் கொண்டுள்ள தொடர்பினைப் புலப்படுத்துவதே சமயம்'' என்று ஒரு தெளிவான வரையறையைத் தந் துள்ளார். இந்த விளக்கமும் மனிதனுடைய ஆன்மிக அனுபவ நிலையைக் குறிப்பாகச் சுட்டு கிறது.

**உண்மையான சமயம்:**

காலப் போக்கில் சமயங்கள் பலவாக வளர்ந்தன. அவற்றிடையே போட்டியும் பொறாமையும் உண்டாயின. கொள்கை அடிப் படையிலும் அவை ஒன்றோடொன்று முரண் பட்டன; மோதிக் கொண்டன. 'எது உண்மை யான சமயம்'? என்பதைத் துணிய இயலாது மக்கள் மயங்கினர். அக்கால கட்டத்தில் அரு ணந்தி சிவாசாரியார் நம் தமிழகத்தில் தோன் றினார்.

''ஓதுசமயங்கள் பொருளுணரும் நூல்கள்
ஒன்றோடொன்று ஒவ்வாமல் உளபலவும்; இவற்றுள்
யாதுசமயம்பொருள் நூல்யாதிங் கென்னில்,
இதுவாகும் அதுவல்ல(து) எனும் பிணக்க தின்றி,
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்ற(து)யா தொருசமயம்? அது சமயம்!- பொருள் நூல்;
ஆதலினால் இவையெல்லாம் அருமறை ஆக மத்தே
அடங்கியிடும், அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்''
(சிவ, சித்தி. சுபக். 265)

என்று அவர் தெளிவுறுத்தியுள்ளார்.

சமயங்களும் சமயநூல்களும் ஒன்றோ டொன்று மாறுபடுகின்றன; அவை பலவாக வும் உள்ளன. எனவே, அவற்றுள் உண்மை யான சமயம் யாது? அச்சமயம் பொருளை உணர்த்தும் நூல் யாது? என்னும் ஐயங்கள் எழலாம். 'உண்மையான சமயம் யாது' தெரி யுமா? எல்லாச் சமயத்தார்களும் கூறும் பொரு ளியல்புகள் தனித்தனியாக ஒவ்வோர் இடத் திலே காணப்படும். அவ்வாறு அமையாமல் அவையெல்லாம் ஒருங்கே தன்னகத்தேகொண்டு விளங்கும் சமயம் எதுவோ, அதுவே உண்மை யான சமயம் எனத் துணியலாம். அச்சமயப் பொருளை உணர்த்தும் நூல் யாதோ, அதுவே உண்மை நூலாக வேண்டும். அச்சமயங்களும் அவை கூறும் பொருளியல்புகளும் வேத ஆக மங்களிலே அடங்கிக் காணப்படுகின்றன. வேத ஆகமங்கள் சிவபெருமானால் அருளப்பட்டன. எனவே, அவை சிவனுடைய அடியிலே அடங்கி விடுகின்றன. சிவபெருமானின் திருவடிகளை அடைவதற்கு உதவும் சைவசித்தாந்தமே உண்மையான சமயமாகும் என்பது, அருணந்தி சிவத்தின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும்.

'எது சமயம்?' என்பதற்கு நம் முன்னோர் தந்துள்ள விளக்கம் புதுமையானது; போற்றத் தக்கது; ஆழ்ந்து சிந்திக்கத் தூண்டுவது. இறை வனுடைய திருவடிகளை அடைவதன் மூலம், பிறவிப் பெருங்கடலை நீந்த முயலுவதும், இறைவனுடைய அருட் பேற்றைப் பெறுவதன் மூலம் பேரா இயற்கைப் பெருவாழ்வை அடைய வழிகாட்டும் சிறப்புமிகு நெறியாகச் சைவ சித்தாந்தம் போற்றப்படுவது புலனா கிறது.

இவ்வாய்வால், சமயம் என்பது ஒருவகை 'வாழ்க்கை நெறி'. என்பது தெளிவாகிறது. மக் கள் அறிவு விளக்கம் பெற உதவும் நெறி! உள்ளம் உரம் பெற்று இனிய வாழ்விற்கு வழி காட்டும் சிறந்த நெறி! உடல் நலத்தோடு ஆன்ம நலத்தையும் பெற்றுப் பெருவாழ்வு வாழத் தூண்டும் நெறி! வாழ்க்கைக் கடலில் வழி தெரியாமல் அல்லற்படுவோருக்கு அடைக் கலம் அளிக்கும் அருள் நெறி! அதுதான் உண்மை நெறி! உயர்ந்த நெறி! உலகம் போற்றும் கடவுள் நெறி!

---

## நல்லோர் காட்சி



*ஓங்குபெரு மரங்களிலே உரைகளையும், ஓடைகளில்*
*பாங்குபெறு நூல்களையும், பலவாய கற்களிலே*
*நீங்கலிலாச் சொற்பொழிவு நெறிகளையும், எதன்மாட்டும்*
*தீங்கில்லாப் பண்பினையும், திறம்தெரிந்து காண்பர்நல்லோர்!*

—தமிழாக்கம்: **ந. ரா. முருகவேள்.**

# திருமயிலைத் தல புராணம்

## (மூலம்)

### நகரச்சருக்கம்

துங்கம் ஆகிய தொண்டைநன் நாட்டிடைப்
பொங்கும் வெள்ளிப் பொருப்பில் இருந்தருள்
மங்கை பாகன் மகிழஎக் காலமும்
தங்கும் ஓர்தலம் உண்டு, அது சாற்றுவாம் (1)

புன்னாக வனத்தெழில்சேர் கயிலைமலை
உமைமயிலாள் பூசை செய்யும்
நன்நாமத் தால்மயிலை எனவிளங்கும்
மூதூர்அந் நகரைக் காணில்,
பொன்னாரும் திருமார்பன் முதலாய
தேவரும்அத் தேவர் காதல்
மின்னாரும் கற்பகப்பூ மழைபொழிந்து
துதிப்பர்நின்றே விசும்பின் மாதோ (2)

அவிர்ஒளியின் நிறம்எல்லாம் சுடிகையின்மேல்
மணிகொழிக்கும் அரவின் வேந்தும்
புவிபுகழும் திருமயிலா புரியின்இயல்
வளங்களெல்லாம் புகழ்ந்து கூறில்,
கவின்முழுதும் சொலிமுடியாது ஒருசிறிது
புகல்வன்எனக் கணித்துஎன் நாவால்
நவிலும்ஒரு சிறுவன்யான் புகல்வதருட்
புலவர்முனம் நகையாம் அன்றே! (3)

வாசவனும் அப்பதியின் வளங்காணில்
பொன்னகரின் மருவான்; உள்ளத்
தேசவனாம் அயன்காணில் மனோவதியின்
மேற்காதல் சிறிதும் வையான்;
கேசவன்கண் டாற்படரான் வைகுந்தம்
தனில்எனவே கிளக்கில் யார்க்கும்
பேசவரி யதுவன்றோ செழிக்கும்மயி
லாபுரியின் பெருமை அம்மா! (4)

(வேறு)

இரும்புனற் பழன மயிலைமா நகரில்
எண்ணிலா மணிவெயில் எறிக்கும்
அரும்பொனின் எயிலும் அரவுலகு இறுத்த
அகழியும் குழீஇயதைத் தெரிக்கில்
பெரும்புறச் சலதி சக்கர வாளப்
பிறங்கலோடு அமர்செய உடைந்தே
வருந்திவ்ந் தரனை வழுத்திய திறனும்
வந்துஅது வளைத்ததும் போலாம். (5)

விண்ணிஎண அரிதாய்த் தனித்தனி உதித்தே
விளங்கிய அருக்கரில் சிறந்தே
மணிவெயில் கொழிக்கும் கனகநொச் சியின்மேல்
வரிந்திடும் மிடைக்கொடித் துளக்கம்
மணியெலாம் திரண்ட விமானங்கள் செலுத்தி
வானவர் மயிலையில் அரனைப்
பணியவந் திடுங்கால் மேனிவேர் புலரப்
பண்ணுறும் விசிறி ஆயினவே. (6)

கான்றுபே ரொளிகள் தமம்அகன்று ஓடக்
களங்கறும் கனக ராசிகளால்
தோன்றுசோ தியின்மா மணிகளால் துளங்கும்
சோமகாந் தத்தினால் தொகுத்தே
ஆன்றநூல் வல்லோர் தரைத்தலைச் சமைத்தே
அந்தர முகடுளைந் திடவே
ஈன்றுநின் றிடும்மா மண்டபத் திரள்கள்
கெழுமுவீ திகளையார் அளப்பார்? (7)

(வேறு)

எண்டிசையும் புகழ்விரிக்கும் அப்பதியில்
கனகநில வெறியா எங்கும்
மண்டுபெரும் கோபுரத்தின் நுனியில்இளம்
சிகண்டியுளம் மகிழ்ந்து உலாவல்
தெண்திரைசூழ் உலகில் இமையபருப்
பதத்தின்உயர் சிகர மீதில்
அண்டமெலாம் கடந்தவள்தன் பாங்கியரொடு
அன்பின்விளை யாடல் மானும்! (8)

அங்கியெனப் பிரபைவிடும் வித்துருமத்
தூண்நிறுத்தி அதன்கீழ் மேலும்
பொங்கும்ஒளி முழுநீல மணிபரப்பி
நிலத்திமும் பொதிந்திவ் வாறு
தங்கும்மணி மாடங்கள் தம்எழில்நாம்
பகரில்முன்னாள் சபதம் கூறிப்
பங்கயனும் நெடுமாலும் தேடஅரன்
அன்றுநின்ற பண்பாம் மன்னோ! (9)

(வேறு)

வெண்ணிலா மணி மேடையின் வாழ்மினார்
தண்ணுலாம் வதனம் சாளரம் தொறும்
மண்ணில் ஆடவர் மாமதியே இவண்
எண்ணிலா மதி என்ன விளங்குமால் (10)

(வேறு)

ஆரணம் முழங்கும் தெய்வ
அந்தணர் மறுகின் வான்போல்
வாரணம் முழங்கும் மன்னர்
மன்னும் ஆவணத்தின் அம்பொன்
தோரணம் வணிகர் வீதி
சூழும் இந்நகரம் ஒன்றே
நாரணன் அளகை வேந்தன்
வளமெலாம் நல்கும் மாதோ! (11)

வேதியர் முத்தீ ஆற்றும்
விழுத்தகு தூமத் தாலும்,
மாதர் பூங்குழற் செருக்கின்
மருங்கு அகில் தூமத்தாலும்
சோதி வான் கதிரின் தேவைத்
தோய்ந்த சூளிகையின் உச்சி
மீதுகண் படுக்கும் வெள்ளை
மேகம் கார்மேகம் ஆமால்! (12)

மாநிலம் காக்கும் மன்னர்வாழ்
மணிமறுகின் உற்றே
வான்உறை முகிலைக் கோட்டால்
உடைத்திடும் மத்த வேழத்
தானம் வல்லிகள் பூண்தாளால்
தரணியுற்று ஆறாந் தன்மை
நீல்நிறப் பொற்றை மீதில்
நின்றிழி அருவி ஆமால் (13)

ஏர்உழவோர்கள் வாழும்
எழில்தரு மணி வீதிக்கண்
சீர்உறு செந்நெற் குன்றம்
செழுங்கழைக் கட்டிக்குன்றம்
பார்உறு செம்பொற் குன்றம்
பன்மணிக் குன்றம் போன்றே
தேருதற் கரிதாய்த் தோன்றச்
சிறந்திடும் உழவர் வீதி (14)

விரிகதிர் விடும்பொன் மாட
வியன்மணி முன்றில் தோறும்
அரியபூங் கதலி சேர்த்தி
ஆரமா லிகைகள் நாற்றி
எரிமணித் தீபம் ஏற்றி
இலகுசெய் சாந்தம் ஊற்றிப்
பரிவுடன் பனிநீர்க் கும்பம்
பாவையர் அமைப்பார் எங்கும் (15

தளர்ந்து நுண்ணிடைகள் ஆடச்
சரிகுழல் அளிகள் பாட
வளர்ந்தரு வதன சீத
மதியம் முத்திறைப்ப மின்னில்
துளங்கிட இலகும் மேனி
சூழ்ந்து மின்னார்கள் ஆட
விளங்கு பல்லியங்கள் ஆர்க்கும்
விழாஅணி மறுகு தோறும். (16)

புதுமது மழைபோற் சிந்தப்
பொதியவிழ் பாளைப் பூக
முதுபழத் தெங்கின் சோலை
மொய்த்துவிண் அருந்த லாலே
விதுஒளி தபனன் சோதி
மேவாஅந் நகரின் மாடக்
கதிர்மணி ஒளியும் முத்தின்
சோதியும் காய்வ தம்மா. (17)

சீர்அணி மயிலை வாழும்
சிவன்தனைத் தொழுதங் குள்ளார்
ஆரணன் பதம்வேட் டாலும்
அன்பொடு வாக்கு இறந்த
காரணன் பதம்வேட் டாலும்
கட்கடை அதனால் ஈயும்
பூரண ஞானச் செல்வப்
புண்ணியத் தவர் அனேகர் (18)

(வேறு)

வித்தக நின்மலன் உரைத்த வேதமும்
ஆகம விதியும் விளங்க ஆய்ந்தே
பொத்தை உடலினைப் பொருளன்று எனஎண்ணிப்
புலன்ஐந்தும் வென்று அனாதி
முத்தன் அடிகண்டு இதய முளரி
அதுதனில் ஏற்று மோகம் நீங்கிச்
சித்திரமே என இருக்கும் சிவயோகர்
திருமடமும் திகழும் எங்கும். (19)

புத்திரனை இல்லார்க்குப் பூதலத்தும்
பயன்இலை, பொன் உலகின் கண்ணும்
எத்தலத்தும் பயனிலைஎன்று எண்ணி, மலம்
இல்லாத இறைவன் தாளைச்
சித்தமுற வைத்து, அவன்றன் திருவருளால்
தாம்பயந்த சிறுவர் தம்மை
முத்தனைய மூரலினார் பாராட்டும்
இசைபுகுந்து முழங்கும் வானும் (20)

அரியதவம் முன்முயன்றேம் ஆதலினால்
அமலேசன் கோயில் புக்கே
உரிமையுறத் தரிசிக்கும் உடல்எடுத்தோம்
என்றுளத்தின் ஓகை உற்றே
கரதலத்தால் மலர்தூவிக் கடவுள்அடிக்
கமலஇணை பணிந்து கையால்
பரிவுறவே தொண்டுசெய்யும் அகத்தடியார்
வாழ்மனைகள் பலவே பாங்கால் (21)

அறுத்துஆசை உடலகத்தும் அமலனுக்கு
அன்பாய் விமல உருத்திராக்கம்
பொறுத்து ஆரம்எனப் புதியசாந்தம் என
வெண்ணீறு பொலியப் பூசி
ஒறுத்து ஆறுவகைக் குறும்பும், உயிர்க்குயிராய்
நின்றுஅவற்றிற்கு உரிய போகம்
நிறுத்தானைப் பூசிக்கும் சிவநேசர்
திருமடங்கள் திகழும் எங்கும் (22)

ஓதிமறை ஒருநான்கும் இருமூன்றும்
எழுநான்கும் உணர்ந்து எல்லோர்க்கும்
பேதம்அற நிறைந்துஉறையும் சிவனேஎம்
பெருமான்என்று உளத்துட் பேணிச்
சோதிதனைச் சின்மயனைப் பூம்பாவை
ஈசன்எனும் தூயோன் அம்பொற்
பாதமலர் அருச்சிக்கும் சிவமறையோர்
ஆலயங்கள் பலவும் எங்கும். (23)

மண்டபமும் கோபுரமும் மதிதவழும்
திருமதிலும் வளத்தால் ஓங்கப்
புண்டரிகத் தவன்முதலோர் பூசித்துச்
சிவலிங்கம் அதனிற் போற்றித்
திண்திகழச் செய்வித்த ஆலயங்கள்
நிறைந்திலங்கத் திசைகள் தோறும்
பண்திகழும் மறைஒலியும் மூவர்தமிழ்ப்
பாஒலியும் பரவும் எங்கும். (24)

(வேறு)

உள்நெகிழ் கருணைச் செல்வத்து
உயர்தவ முனிவர்க் காணில்
துண்ணென எழுந்து தாளில்
தொழுதெழுந்து எம்பாற் சேர்தற்கு
எண்ணரும் தவஞ்செய் துள்ளேம்
என்றுதம் மனைகட்கு ஏகி
அண்ணல்தன் அடியார் பூசை
அளிப்பார் அந்நகரில் வாழ்வார் ((25)

சங்கரன் தனையே போற்றும்
சைவ மன்னவர் அனேகர்
கொங்கலர் கூந்தற் செவ்வாய்
குவிமுலை வடமீன் கற்பின்
மங்கையர் அனேகர் வெள்ளி
மலைமிசை இருந்து வாழும்
புங்கவன் உமையாள் போலப்
புண்ணிய நகரின் வாழ்வார் (26)

இன்னசீர் படைத்து மேவும்
எழில்மயிலை யில்வாழ் சைவ
மன்னவர் மறையோர் எம்ஊர்
வளர்கதை அதனைத் தேர்ந்தே
அன்னவை தமிழி னாலே
அறைகென அவர்கள் பாதப்
பொன்அலர் எனதுஉட் கொண்டே
புகலுவான் தொடங்கிப் புக்கேன் (27)

மருகுழும் பாவை ஈசன்
மயிலையம் புராணம் தன்னில்
ஒருதிரு விருத்தம் கேட்கின்
ஒழியும் எப்பவமும் என்றால்
பொருவிலாப் புராணம் முற்றும்
புகலுவோர் கேட்போர்க்கு இன்னே
வருபெரும் பேற்றை யாரே
வகுத்துரை செய்ய வல்லார்?
(28)

## (4) பொதியமாமலைச் சருக்கம்

நிதியும் ஆரமும் நிறை தருக்களும்
நதியும் மேவி நன்னலம் மிகுத்துமேல்
மதி உலா வரும் வயினும் முற்றும்நீள்
பொதிய மாமலைப் புகழ் நவிற்றுவாம். (1)

விந்தமும் பிலம் புகுத மெய்ந்நெறி
தந்தவன் பெரும் சலதி உண்டவன்
இந்த வெற்பையே இடங் கொண்டான் எனின்
அந்த வெற்பு அணி அறையற் பாலதோ (2)

விண்தனை உண்டு எண்டிசையும் மருஉயிர்க்கும்
செஞ்சாந்தம் மிடையும் சூழல்
வண்டுஅளிகள் கிளிகள்பசுந் தேன்பொருவ
மிழற்றும்மறை ஒலியும் பூவில்
எண்தவிரும் இடங்கள்தொறும் தண்ணிறைக்கும்
விண்ணிறைக்கும் இன்பம் ஈயும்
மண்டும் மென்சீதள வசந்த ஒலியும்
உண்டுஅவ்வரை வளம்ஆர் வகுக்கவல்லார்(3)

### (வேறு)

துங்க மாதவர் பாழிமேல் இருத்தலால் சுகமே
அங்கம் ஆகிய கொள்கையால் அருள் அமர்தலினால்
கொங்குஉலாவியகோதையால்வல்லிமென்கொடியே
தங்கலால் அரன் நிகர்ப்பது சந்தனா சலமே. (4)

வனசம் மாதங்கம் மேவலால் இரதிகோன் வளமார்
தனதுகால்எனப் படைத்தலால் தரை அளந்திடலால்
மினகவான் தொட வளர்தலால் விளங்குவேல்
விழியாள்
சனகி நாதனை நிகர்ப்பது சந்தனா சலமே (5)

கலை நன்மான் உடன் நழிஇக்கொடு விளங்கிய கவி
னால்
துலைவுஇலாத பல்வளமெலாம் படைத்திடும் துணி
பால்
மலைவு இலாமலே பூவின்மேல் இருத்தலால் மறை
யோர்
தலைவனாம் அயன் நிகர்ப்பது சந்தனா சலமே (6)

இலங்க வெண்கரி ஏறிஅங்கு உலாவிய எழிலால்
நலஞ்செய்நாடகத்தியர் உறை பொற்பதின்நலனால்
துலங்கு வச்சிரவாள் சிகைக்கோடலால் சுரர்கோன்
அலங்கல் வாசவன் நிகர்ப்பது சந்தனா சலமே (7)

துய்ய ஆறுமா முகன் உம்பல்தனைத் தருதுணிபால்
வையம் யாவையும் குளிர்ப்புறும் கால்உள வனப்
பால்
வெய்ய கேசரி மேவலால் சங்கரன் விழைவால்
சைவ நாயகி அனையது சந்தனா சலமே. (8)

புனித வெங்கட மாதவன் மேல்திகழ் புகழால்
இனிய சீர் இலக்கணம் எலாம் விளங்கிடும் இயல்
பால்
நனி மிகுந்த எண்வளம் அடைந்தவர்க்கு அருள்
நலனால்
தனிமலர்த் திருஅனையது சந்தனா சலமே. (9)

கலைகள் எண்எழுத்து ஆதி தன்வயின் விளங்கலி
னால்
மலைவிலா அயன் தாலமே வதிந்திடும் வகையால்
துலைவில் பல்பொருட்கு இடங்கொடுத்து இருந்
திடும்துணிவால்
தலைமை வாணியை அனையது சந்தனா சலமே(10)

கற்பகத் தருநிழல் அணிகலந்து வைகலினால்
வெற்பு அடக்கினோன் தன்னிடம் மேவியவியனால்
அற்புதந் தருகோதையால் அல்குலின் அணிஎன்
மெய்ச் சசிஅனையது சந்தனா சலமே. (11)

### (வேறு)

செழுஞ்சுடர்கான்று இருள்சீய்க்கும் நறும்தீப
மரப்பொதும்பர் செறியும் பாரில்
எழுந்துபடர் ஒளிதரளக் குவால்அனந்தம்
நிறைந்து வதிந்து இலகப் பாங்கர்
கொழுங்கனக மணிக்குவைகள் திகழ்வதுநற்
பொதியம் எனும் குவட்டில் ஏறி
ஒழுங்குடன்வான் சுடர்கள்பல உருக்களொடு
தவம்இழைப்பது ஒக்கும் மாதோ! (12)

பொறி அடக்கிப் புலன்துறந்தங்கு உள்ளுணர்வோர்
இனிதுறங்கு புனிதர் ஆனோர்
செறிதரும்மெய்த் தவாச்சிரமம் ஒருகோடி
திசைகள்தொறும் திகழா நிற்கும்
முறிஒடித்தே மதமாக்கள் பன்னசாலைகள்
அவர்க்கு முடிக்கும் ஆக்கள்
அறிவுடன்அங்கு அவர்பூசைக்கு அமுதளிக்கும்
காலம்உணர்ந்து அங்கண் அம்மா (13)

நறுஞ்சூதம் கதலிபலா நைந்துஉமிழும்
தேன்அருவி நடந்துஅங்கோர்சார்
துறுங்கானம் அதிலேறி முகில்பொழியும்
வெள்ளருவி துள்ளி ஓர்சார்
அறுங்காலம் உறுகார்போல் முழங்குகயம்
ஒழுக்கும்மத அருவி ஓர்சார்
இறும்பூதுஇங்கு இவைவாணி தங்கை
காளிந்தி என இழியும்மாதோ! (14)

தென்னாடு செழித்தோங்க முத்தமிழும்
விளங்கமுன்னாள் சிறந்து தோன்றி
மின்ஆர மணிகொழிக்கும் பொருநைதரும்
அம்மலைமேல் விளங்கு கோட்டில்
புன்னாகம் பொன்இதழி பாடலம்தேன்
உகுத்துமலர் பொழியும் காட்சி
எந்நாளும் சிவலிங்கத்து அன்பர்கள்
நீரொடு மலரிட்டு இறைஞ்சல்போலும்! (15)

காவதங்கள் பலகடந்து மருவுலா
வான்முடிமேல் ககனம் சூடும்
பூஅளைந்து பசுந்தென்றற் குழவிதவழ்
செஞ்சாந்தப் பொதும்பர் மேவித்
தேவரெலாம் இனிதுறைய இச்சைபெருகப்
பெருகத் திரிவர் என்றால்
தாவில்அருட் பொதியமலைத் தனிப்புகழ்என்னால்
புகழும் தகைமைத் தேயோ! (16)

(தொடரும்)

# மணிமேகலைக் காப்பியம்

'சிலம்புச் செல்வர்'
திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள்

மணிமேகலைக் காப்பியத்தின் காலத்தை வரையறுப்பதிலே ஆராய்ச்சியாளர்களிடையில் ஒருமித்த கருத்து நிலவவில்லை. கி.பி. இரண்டாம் நூற்றாண்டு என்று பலரும், 5-ஆம் நூற்றாண்டு என்று சிலரும் தெரிவித்துள்ளனர். சிலப்பதிகாரம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டளவில் தோன்றியிருக்கலாம் என்பது ஆராய்ச்சியாளரில் மிகப் பெரும்பாலோர் ஒப்புக் கொண்டுள்ள உண்மையாகும். இதுவே, மணிமேகலையின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு என்று கருதப்படுவதற்குக் காரணமாகிவிட்டது. உண்மையில் சிலப்பதிகாரமும் மணிமேகலையும் ஒரே காலத்தில் தோன்றியவையல்ல என்பபதே தமிழ்நாட்டின் அரசியல் வரலாற்றுக்கு ஒத்த கருத்தாகும்.

சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலுமுள்ள பதிகங்கள் அந்த இரண்டு காப்பியங்களின் ஆசிரியர்கள் ஒரே காலத்தவர் என்று கருதும்படியாகச் செய்கின்றன. ஆனால், இந்தப் பதிகங்கள் காப்பிய ஆசிரியர்களால் செய்யப்பட்டவையல்ல. பிற்காலத்துப் புலவரால்-இரண்டு காப்பியங்களுக்கும் இடையே காலத்தால் உறவு கற்பிக்கும் உள்நோக்குடன் இயற்றப்பட்டவையாகும். அப்படியே, சிலப்பதிகாரத்தின் இறுதியிலுள்ள நூற் கட்டுரையும் இளங்கோவால் இயற்றப்பட்டதல்ல என்று சொல்லலாம். பதிகங்களும் நூற்கட்டுரையும் ஒரே ஆசிரியரால் இயற்றப்பட்டிருக்கலாம்.

மதுரைக் கூலவாணிகன் சாத்தனாரின் பெயரால் சங்க இலக்கியங்களிலே பல சிறந்த பாடல்கள் காணப்படுகின்றன. அதனால் அந்தச் சாத்தனார் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்னர் வாழ்ந்தவராதல் வேண்டும். அவரை மணிமேகலையின் ஆசிரியராகக் கொள்வதற்கில்லை.

சிலப்பதிகாரத்திலே பதிகத்தில் மட்டுமல்லாமல் காட்சிக் காதையிலேயும் சேரன் செங்குட்டுவனின் நண்பராக ஒரு சாத்தனார் அறிமுகமாகிறார். அவரைத் 'தண்டமிழாசான் சாத்தன்' என்கிறார் இளங்கோவடிகள். இந்தச் சாத்தனாரும் சங்க இலக்கியங்களில் வரும் சாத்தனாரும் ஒருவர்தானா? என்ற வினாவுக்கு இதுவரை புலவருலகம் ஒருமனப்பட்டு விடைதரவில்லை. இது எப்படியாயினுஞ் சரி; சிலம்பில் இளங்கோவடிகளால் அறிமுகப்படுத்தப்படும் சாத்தனார்தான் மணிமேகலையைப் படைத்தார் என்று எண்ணுவதற்கில்லை. காரணம் காலத்தால் சிலப்பதிகாரத்திற்கும் மணிமேகலைக்கும் உள்ள இடைவெளி அதிகமாயிருப்பதுதான். பிற்காலத்தில் மணிமேகலையைப் படைத்த ஆசிரியர், அதனைத் தமக்கு முற்காலத்தவரான சிலம்பில் வரும் தண்டமிழாசான் சாத்தன் பெயரால் உலவவிட்டிருக்கலாம்.

மணிமேகலை போதிக்கும் பௌத்தம் தமிழ்நாட்டிற்குப் புறச் சமயமாகும். தமிழர் பண்பாட்டிற்கும் பழக்க வழக்கங்களுக்கும் மாறுபட்ட வாழ்க்கை நெறிகளை அவர்கள் மீது மணிமேகலை ஆசிரியர் திணிக்க விரும்பினார். அதனால், தமிழினத்தின் தேசிய காப்பியமான சிலப்பதிகாரத்தில் வரும் மாதவியின் மகளான மணிமேகலையைத் தலைவியாகக் கொண்டு, அந்தச் சிலம்பிலேயே அறிமுகப்படுத்தப்படும் பௌத்த துறவியான சாத்தனார் பெயரால் தமது காப்பியத்தை அவர் உலவவிட்டிருக்கலாம்.

சிலப்பதிகார ஆசிரியரும் மணிமேகலை ஆசிரியரும் ஒரே காலத்தவரென்றும், அவர்கள் கூடிப்பேசி, பின்னவர் மணிமேகலையையும், முன்னவர் சிலம்பையும் படைத்தனரென்றும், பிற்காலப் பௌத்தர்கள் கதைகட்டிவிட்டிருக்கலாம். பதிகங்களை விட்டு விட்டால், சிலப்பதிகார-மணிமேகலை ஆசிரியர்களை நண்பர்களாக்கிக் காட்டும் செய்தி வேறு எதுவும் இல்லை.

மணிமேகலையை ஆழ்ந்துபடித்து ஆராய்ந்தால், அது தமிழ்நாட்டில் பௌத்தர்கள் ஆட்சி புரிந்த ஒரு காலத்தில் இயற்றப்பட்டிருக்கலாம் என்ற முடிவுக்கே வரவேண்டியிருக்கிறது. அதிலே, வேத மதத்தின் குருமார்களான அந்தணர்கள் பழிக்கப்படுகின்றனர். வேதமதக் கொள்கைகளும் முடிவுகளும் வெளிப்படையாக மறுக்கப்படுகின்றன. அதுபோல சமண மதத்

திகம்பரர்கள், கீழ்மக்களால் எள்ளி நகையாடப் படும் காட்சி மணிமேகலை ஆசிரியரால் மிகுந்த உற்சாகத்துடன் வருணிக்கப்படுகின்றது. சமண மதக் கொள்கை கண்டிக்கப்படுகின்றது, பௌத்த மதக் கொள்கையே உயர்ந்ததென்று தம்பட்டமடித்துக் கூறப்படுகின்றது. நிச்சய மாக, வேத மதத்தார் ஆட்சியிலோ, சமண மதத்தார் ஆட்சியிலோ மணிமேகலை போன்ற மதத் துவேஷமுடைய, பௌத்தமதப் பிரசார இலக்கியம் தோன்றுவது சாத்தியமில்லை.

தமிழ்நாட்டில் கி. பி. 3 ஆம் நூற்றாண்டு முதல் 5 அல்லது 6 ஆம் நூற்றாண்டு வரை களப்பிரர் என்னும் தமிழரல்லாத ஒரு கூட்டத் தார் ஆட்சி புரிந்திருக்கின்றனர் என்றும், அவர்கள் முதலில் பௌத்த சமயச் சார்புடைய வர்கள் என்றும் சரித்திர ஆசிரியர்கள் கூறு கின்றனர். அவர்களுடைய ஆட்சிக் காலத்தின் முற்பகுதியிலேதான் மணிமேகலைக் காப்பியம் தமிழ்நாட்டில் குடியேறித் தமிழ் படித்துப் புலமை பெற்ற ஒரு பௌத்த முனிவரால் இயற்றப்பட்டிருக்க வேண்டும்.

கி. பி. 2-ஆம் நூற்றாண்டுவரை தமிழகத் திலே தமிழருடைய பண்பாட்டுக்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஒத்தவையான சைவ-வைணவ சமயங்களே யன்றி ஒவ்வாதவையான சமண-பௌத்த சமயங்களும் இருந்தன என்பதனைச் சிலப்பதிகாரத்தால் அறிகிறோம். அந்த அகச் சமயங்களையும் புறச் சமயங்களையும் பின் பற்றிய மக்களிடையே தமிழின அடிப்படையில் ஒருமைப்பாடு நிலவியதையும் ஐயமற அறிய முடிகிறது. மதப் பூசல் என்பது மணிமேகலைக் காப்பியம் தோன்றுவதற்கு முன்வரை தமிழ் மக்களிடையே இருந்ததில்லை. அரசு ஒரு சமயச் சார்பற்றதாகவே இயங்கி வந்தது. வேந்தரும் சமய வெறிபிடித்துச் செங்கோல் பிறழ்ந்ததில்லை. தமிழ் இன உணர்வு அடிப் படையில் அக-புறச் சமயங்களிடையே நிலவிய ஒருமைப்பாட்டினை வளர்க்கத்தான் இளங் கோவடிகளால் சிலப்பதிகாரக் காப்பியம் படைக்கப் பெற்றது. தமிழர் சமுதாயத்தில் நிலவிய இந்த ஒருமைப்பாட்டுக் கட்டுக்கோப் பையே உடைத்துவிடக்கூடிய ஆயுதமாக, மணி மேகலைக் காப்பியம் படைக்கப்பட்டது.

இலக்கியங்களுக்குச் சுவையூட்டுவதற்குக் கற்பனை தேவைப்படுகிறது. ஆனால் அது உண்மையை அழகுபடுத்தும் அணிகலனாகவே பயன்படுத்தப்படவேண்டும். சங்ககாலக் கவி ஞர்கள் கற்பனையை இப்படித்தான் பயன் படுத்தினார்கள். சிலப்பதிகாரக் காப்பியத்தி லும் இதே முறையைத்தான் காண்கின்றோம். இதற்கு மாறாக, ஒரு கற்பனையை மெய்ப் பிக்க மற்றொரு கற்பனையைப் பயன்படுத்தி யிருக்கிறார் மணிமேகலை ஆசிரியர். ஒரு பொய்யை மெய்யாக்க மற்றொரு பொய் யையே, உவமையாக்குவதுபோல! இந்த வகை யிலே தமிழ் இலக்கிய உலகில் தமிழர் மரபுக்கு மாறான ஒரு திருப்பத்தை ஏற்படுத்திய ''பெருமை'' மணிமேகலை ஆசிரியருக்கே உரிமை!

உலக வாழ்வானது அநித்தியம் என்று கூறு வதிலே உண்மையிருக்கலாம். ஆனால், அதை அளவுக்கு மீறி வருணிப்பதும், அதற்கெனவே இலக்கியங்கள் படைப்பதும், நாட்டு மக்களிலே ஒவ்வொருவருடைய உள்ளத்திலும் அந்த அநித்தியத் தத்துவத்தைத் திணிக்கப் பிரசார மிஷனரிகளைத் தோற்றுவிப்பதும் நாட்டை நல்வழிப்படுத்தும் முயற்சிகள் ஆகா. நாடு முழுவதையுமே சந்நியாசிகளின் மடமாக மாற்றிவிடுவதென்பது சாத்தியமில்லை. சாத் தியமாகாத ஒன்றைச் சாத்தியமாக்குவதற்குத் தான் மணிமேகலைக் காப்பியம் படைக்கப்பட் டது.

கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன் வரை தமிழகத்தின்மீது வடபுலத்தவர் அரசியல் ஆதிக்கம் பெற்றதாக இலக்கியத்திலோ, வர லாற்றிலோ செய்தி இல்லை. கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் கலிங்கம்வரை படை நடத்தி வந்த அசோகன்கூடக் கலிங்கத்திற்குத் தெற்கே வரத் துணிவின்றி, கலிங்கத்தைக் கைப்பற்றிய தோடு போரை நிறுத்திக் கொண்டான்.

முதன் முதலாகக் கி.பி. 3-ஆம் நூற்றாண் டில் புத்த சமயத்தவர் எனப்படும் களப் பிரர்கள்தான் தமிழகத்தின்மீது அரசியல் ரீதி யில் ஆதிக்கம் பெறுகின்றனர். புத்தமதத்தின் துணைகொண்டுதான் அவர்கள் தமிழரை அடி மைப்படுத்தினர். அந்த மதத்தின் நிலைக்கள மாகத் தமிழகத்தை மாற்றும் பொருட்டாகவே புத்த சமய இலக்கியங்களைப் பெருக்கக் களப் பிரர் ஆட்சி பௌத்தமதத் துறவிகளுக்குத் துணை புரிந்திருக்கிறது. அந்த வகையில் தோன் றிய முதல் காப்பியம்தான், மணிமேகலை.

கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்கு முன் வரையிலுள்ள பௌத்த இலக்கியங்களிலே பெண் தெய்வங்கள் காணப்படவில்லையென் றும், இந்த நூற்றாண்டுக்குப் பின் வெளியான இலக்கியங்களிலேயே பெண் தெய்வங்கள் இடம் பெற்றுள்ளன என்றும் பௌத்த இலக் கிய ஆராய்ச்சியாளர் அறிவிக்கின்றனர்.

மணிமேகலையில் சம்பாபதித் தெய்வமும், மணிமேகலா தெய்வமும் பாத்திரங்களாக்கப் பட்டுள்ளமையால், இந்தக் காப்பியம் கி. பி. மூன்றாம் நூற்றாண்டுக்கும் ஐந்தாம் நூற் றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில்தான் தோன்றியிருக்க முடியுமென்றும், அவர்கள் கூறுகின்றனர். இக்கருத்து, மணிமேகலை யானது சிலப்பதிகாரத்தின் இணைக்காப்பியம் அல்ல என்றும், சிலப்பதிகாரத்தில் வரும் சாத்த னாருக்கும் மணிமேகலைக் காப்பியத்திற்கும் உறவு இருக்க முடியாதென்றும் உறுதிப் படுத்துகின்றது. ✱

# "மனிதன்"

திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள்

மனிதன் என்ற சொல்லுக்கு நினைப்பவன் என்பது பொருள். நினைக்கும் கருவி மனம். மனத்தையுடையவன் மனிதன். தமிழில் மனிதன்; வடமொழியில் மநுஷ்ய: ஆங்கிலத்தில் மேன். இவையெல்லாம் மன் என்ற பகுதியடியாகவே பிறந்தவை. மனிதனாகப் பிறந்தவர் எல்லோரும் உண்மையில் மனிதனாகிவிட முடியாது. உணவைப் பற்றியோ, உறக்கத்தைப் பற்றியோ, வேறு மற்ற உலகப் பொருள்களைப் பற்றியோ, நினைப்பவன் மனிதனாக மாட்டான். உண்பது, உறங்குவது, மக்களைப் பெறுவது, உலாவுவது முதலிய யாவும் விலங்குகளுக்கும் நமக்கும் பொது. விலங்குகளும் நிரம்ப உண்கின்றன. நாமும் உண்கின்றோம். விலங்குகளும் மக்களைப் பெறுகின்றன. நாமும் பெறுகின்றோம். ஆகவே மனிதர்களாகிய நாம் எந்த வகையில் விலங்குகளைவிட மேலானவர்கள்? என்ற கேள்வி எழுகின்றது.

''நான் யார்? என் உள்ளமார்? நான் எங்கிருந்து வந்தேன்? எதற்காகப் பிறந்தேன்? இந்த உடம்பு தானே வந்ததா? ஒருவன் தந்துவந்ததா? தந்தவன் தன்பொருட்டுத் தந்தானா? என் பொருட்டுத் தந்தானா? நான் எங்கே போக வேணும்? இந்த உடம்பைத் தந்த ஒருவன் தன்மை யாது? அவனை அடையும் வழி யாது? அடைந்தவர்கள் யார்? என்பனவாதி வினாக்களை உள்ளுக்குள் கேட்டுக்கொண்டு, அவைகளைப் பற்றி ஆழமாக நினைத்து, தகுந்த விடைகளையறிந்து அறவொழுக்கத்தில் நிற்பவன்தான் உண்மையான மனிதன். இல்லையேல் மனிதவுடம்பெடுத்த விலங்குதான்.

ஒரு மாவட்டத்திற்கும், மற்றொரு மாவட்டத்திற்கும் என்ன வேற்றுமை? நடுவில் ஒரு எல்லைக்கல் இருந்து இரண்டு மாவட்டத்தையும் பிரிக்கின்றது. அதுபோல் மனிதனுக்கும், விலங்குகளுக்கும் இடையில் இட்ட எல்லைக் கல், கடவுள் நினைவு. கடவுள் உணர்வு இல்லையானால், அவன் எத்துணை அறிஞனாயினும் விலங்கே.

''கண்ணாவா ரேனுமுனைக் கைதொழாராயின்அந்த
மண்ணாவார் நட்பை மதியேன் பராபரமே''

என்கின்றார் தாயுமானார்.

திருவொற்றியூரிலே, நெல்லிக்கா பண்டாரத் தெருவில், ஒரு மகான் இருந்தார். மாலையிலே ஒற்றித் தியாகப்பெருமானை வணங்கும் பொருட்டு மக்கள் போகும்போது அம்மகான், ''குதிரை போகின்றது, எருமை போகின்றது, நாய்போகின்றது,' ஆடு போகின்றது, புலி போகின்றது, நரி போகின்றது, பூனை போகின்றது, பெருச்சாளி போகின்றது என்று கூறுவாராம். இராமலிங்க அடிகளார் போனால் மட்டும் 'மனிதன் போகின்றான்' என்பாராம். ஆகவே மனிதப் பண்புடையவனே உண்மை மனிதன்.

மேலைநாட்டில் ஒரு ஆன்றோர், பகலில் விளக்கை ஏந்திக்கொண்டு, தெருவில்போகின்றவரை, அவ்விளக்கைக் கொண்டு உற்று உற்றுப் பார்த்துத் திரிந்தாராம். வீதியில் போகின்றவர்கள் இவருக்கென்ன பயித்தியமா? பட்டப் பகலில் விளக்கை ஏந்திக்கொண்டு, போகின்றவனையும், வருகின்றவனையும், உற்று உற்றுப் பார்க்கின்றாரே? இதன் கருத்து என்ன? என்று கூறிப் பரிகசித்தனர்; சிலர் சிரித்தனர், சிலர் இகழ்ந்தனர். சிலர் 'ஓய் இது என்ன வேலை?' என்று வினாவினார்கள்.

ஐயா! வேறு ஒன்றுமில்லை. மனிதர் யாராவது இருக்கின்றாரா? என்று ஆராய்ந்து பார்க்கின்றேன் என்றார். ஆகவே எல்லோரையும் மனிதராக அவர் கருதவில்லை. அப்பரடிகளும் உலகத்தை நோக்கி,

''மனிதர்கா ளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி யுண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈச னெனுங்கனி
இனிது சாலவு மேசற் றவர்கட்கே''

என்று பாடி மனிதர்களை அழைக்கின்றார். ஆகவே, நாம் மனிதர்களாக ஆக வேண்டும். பொன்னையும் பொருளையும் வீட்டையும் மாட்டையும் நிலபுலங்களையும் பட்டத்தையும் பதவியையுமே நினைத்து நினைத்து நெஞ்சு புண்ணாகி மடிந்துவிடக் கூடாது. முதலில், குறிப்பிட்ட நேரங்களில் இறைவனை நினைக்க வேண்டும். பின்னர் நாள் செல்லச் செல்ல, நல்ல சாதனையால் இடையறாது இறைவனை நினைக்க வேண்டும்.

''இறைவனே? உன்னை மறந்தால் இறந்து போவேன்'' என்கிறார் அப்பர். இறைவன் நினைப்பவர்களுடைய உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளுவான். ஒரு மந்திரி, வைஸ்ராய், அல்லது ஒரு கலெக்டர் நம்முடைய வீட்டிற்கு வந்து சில நிமிஷம் இருந்து சென்றால், அதனைப் பெருமையாக நினைக்கின்றோம். இறைவன் நமது உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு உறைவானாயின் அதைவிடப் பெருமை வேறு ஒன்று இருக்க முடியுமா? நன்கு சிந்தியுங்கள்.

பனைக்கை மும்மத வேழ முரித்தவன்
நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்
அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ

இறைவனைத் தூய சிந்தையுடன் நினைக்க வேண்டும். ''ஆபாதனேனும் நாளும் நினைவது பெறவேணும்'' என்று வரங்கேட்கின்றார் அருணகிரிநாதர். ஆகவே, மனிதர்களாகிய நாம் நினைக்க வேண்டிய பொருளாகிய நிமலனை, இடையறாது நினைத்துப் பிறவிப் பயனைப் பெறுவோமாக! *

# ஒழுக்கத்தின் விழுப்பம்

'முத்தமிழ்க் காவலர்'
திரு கி. ஆ. பெ. விசுவநாதம், திருச்சி

''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்''

என்பது திருக்குறளில் ஒரு குறள். 'விழுப்பம்' என்பது சிறப்பு என்று பொருள்படும். அது முறையே குணம், நலம், புகழ், பெருமை உயர்வு என்றாகும். இத்தகைய நலன்கள் அனைத்தையும் கொண்ட சிறப்பை 'ஒழுக்கம் தரும்' என்பது வள்ளுவர் கருத்து.

நல்லொழுக்கம், தீயொழுக்கம் என ஒழுக்கம் இருவகைப்படும். எனினும் ''ஒழுக்கம்'' என்றால் அது தீயொழுக்கத்தைக் குறிக்காமல் நல்லொழுக்கம் ஒன்றை மட்டுமே குறிக்கும் என்பதை இக்குறள் நமக்கு அறிவிக்கிறது. ஆடை அணிகள், மாட மாளிகைகள், ஆடு மாடுகள், அலங்கார வகைகள், பொன் பொருள்கள், நீர் நிலங்கள், வண்டி வாகனங்கள் முதலியவற்றுள் எதுவும் விழுப்பம் தராது என்பதை இக்குறள் வெளிப்படையாகக் கூறுகிறது.

மேடைமீது ஏறி ஆவேசமாய்ப் பேசுகிற பேச்சு, அருமையாக எழுதுகின்ற எழுத்து, அள்ளிக்கொடுக்கின்ற கொடை, அதிகாரம் வகிக்கின்ற பதவி, ஆகியவைகளால் பெற முடியாத சிறப்பை ஒருவன் ஒழுக்கம் ஒன்றினால் பெறலாம் என்பதை, ''ஒழுக்கம் விழுப்பம் தரும்'' என்ற சொற்கள் நமக்கு அறிவித்துக் கொண்டிருக்கின்றன. மக்களாய்ப் பிறந்து, மக்களாய் வாழ்ந்து, மக்களாகவே மடிய விரும்பும் எவரும், ஒழுக்கத்தைப் போற்றி வளர்த்துக் காப்பாற்றக் கடமைப்பட்டவர் என்பதை ''ஓம்பப்படும்'' என்ற சொற்களால் வள்ளுவர் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்.

கடமை! ஒழுக்கத்தைக் காப்பாற்ற வேண்டியது கடமைதான் என்றாலும், நிழல்தரும் என்றே மரம் வளர்க்கப்படுவதையும், பலன் தரும் என்றே பயிர் வளர்க்கப்படுவதையும், பால் தரும் என்றே பசு வளர்க்கப்படுவதையும் கண்ட வள்ளுவர், 'அப்படிப்பட்ட மக்களிடத்தில் எதுவும் தராத கடமையைச் சொல்லி என்ன பயன்?' என்ற புண்பட்ட மனத்துடன் ஆராய்ந்து, பிறகே ''விழுப்பம் தரும், ஒழுக்கம் ஓம்பு'' என்று பலனையும் கூட்டிக் கூடியிருப்பதாகத் தெரிய வருகிறது.

இக் குறளில் இவ்வளவு கூறியும் அவர் மனம் அமைதியடையவில்லை. இதற்குள் ஓர் உவமையும் கூறவேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்டார். பொன்னை, பொருளை, மனைவியை, மக்களைக் காப்பாற்றுவதைப் போல ஒழுக்கத்தையும் காப்பாற்ற வேண்டும் எனக் கூற எண்ணியும், இவற்றுள் எதை இழந்தாலும் திரும்பப் பெறமுடியுமே, ஒழுக்கத்தை இழந்துவிட்டால் திரும்பப் பெற முடியாதே என நினைத்து, இவற்றுள் எதையும் உவமையாகக் கூறவில்லை என்று தெரிகிறது.

இவ்வுலகில் இழந்தால் திரும்பப் பெற முடியாதவை இரண்டு. ஒன்று ஒழுக்கம்; மற்றொன்று உயிர். ஆதலால் போனால் திரும்பி வராத ஒழுக்கத்திற்கு உவமை கூற எண்ணிய வள்ளுவர், போனால் திரும்பி வராத உயிரைத் தேடிப் பிடித்து வந்து உவமையாகக் கூறியிருப்பது எண்ணி எண்ணி வியக்கக் கூடியதாகும். இந்த உவமையிலும்கூட, உயிரைப் பாதுகாப்பது போல, ஒழுக்கத்தைப் பாதுகாக்க வேண்டும் என்றா கூறியிருக்கிறார்? அதுதான் இல்லை. 'உயிரைக் காப்பாற்றுவதைவிட அதிகமாக ஒழுக்கத்தைக் காப்பாற்றியாக வேண்டும்' எனக் கூறிவிட்டார். இவ் வுண்மையை உயிரினும் என்ற சொல் நமக்கு நன்றாக விளக்கிக் கொண்டிருக்கிறது.

இருபது நூற்றாண்டுகளுக்குப் பிறகு, எந்த விஞ்ஞானியாவது ஒருவன் தோன்றி, இழந்த உயிரைத் திரும்பக் கொண்டு வந்தாலும் கொண்டு வரலாம். ஆனால் எத்தனை நூற்றாண்டுகளானாலும், இழந்து போன மானத்தைத் திரும்பக் கொண்டுவர எந்த விஞ்ஞானியினாலும் இயலாது என்ற விஞ்ஞான ஆராய்ச்சி உண்மையைக்கூட, வள்ளுவர் பெருமான் இந்த 'உயிரினும்' என்ற சொல்லால் அறிவித்திருக்கிறார் என்பதைக் கண்டு மகிழுங்கள்.

''உயிரினும் சிறந்த பொருள் வேறு எதுவுமில்லை'' என்ற பலருடைய கருத்தைத் திருவள்ளுவர் மறுக்கிறார். ''ஒன்று இருக்கிறது; அது ஒழுக்கம்தான்'' என அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார். இப் போராட்டத்தை இக் குறளில் உள்ள ''உயிரினும்'' என்ற ஒரு சொல் நமக்குப் போராடிக் காட்டுகிறது.

உயிரையுடைய எவரும் உயர்ந்தவராகக் கருதப்படுவதில்லை. ஒழுக்கம் உடைய சிலரே உயர்ந்தவராகக் கருதப்படுவர். ஆதலின் உயிரைக் காப்பதைவிட ஒழுக்கத்தைக் காப்பதே சிறப்பு என்பதை 'உயிரினும்' என்ற

சொல் அறிவிக்கிறது. மானத்தை இழப்பதா? அல்லது உயிரை இழப்பதா? என்ற ஒரு கொடிய நிலைமை ஏற்பட்டுவிட்டால், அந்த நிலையிலும் மானத்தை இழவாதே! உயிரை இழந்துவிடு! என்ற உயர்ந்த நெறியை வள்ளுவர் நமக்கு 'உயிரினும்' என்ற ஒரு சொல்லால் உணர்த்திக் காட்டுகிறார்.

உயிரை இழந்து ஒழுக்கத்தைக் காப்பாற்றிக் கொண்டவன், உள்ளபடியே இறந்தவனாயினும் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உயிர் வாழ்வான். ஒழுக்கத்தை இழந்து உயிரைக் காப்பாற்றிக் கொண்டவன் உள்ளபடியே உயிரோடு இருப்பினும் இழிந்த பிணமாய் நடந்து திரிவான். ஆதலின் காப்பாற்ற வேண்டிய முதல் நிலையில் நிற்பது உயிரல்ல; ஒழுக்கம் என்ற உண்மையை 'உயிரினும்' என்பது உய்த்துணரச் செய்கிறது. ஒருவன் உயிரை இழந்துவிட்டால் அதற்காக அழுது வருந்தும் துன்ப நிலை அவனுக்கு ஏற்படுவதில்லை; அந்நிலை பிறருக்கே ஏற்படும். ஆனால், ஒழுக்கத்தை இழந்துவிட்டால் அதற்காக அழுது வருந்தும் துன்பநிலை பிறருக்கு ஏற்படுவதில்லை. அந்நிலை அவனுக்கே ஏற்படும்! என்ற இச்சிறந்த கருத்தை வள்ளுவர் உயிரினும் என்ற சொல்லிற்குள், அழுது, வருந்திப் புகுத்தியிருக்கிறார் என்பதைக் காணும்பொழுது நமது நெஞ்சமும் நெகிழ்ந்து, வருந்தி, உருகுகிறது.

உயிர் தன்னையுடைய எவர்க்கும் உயர்வு தாழ்வு கற்பித்துக் கொண்டே இருக்கிறது. ஒழுக்கம் அவ்வாறில்லாமல் தன்னையுடைய எவர்க்கும் ஒரே சிறப்பைச் சமமாகத் தந்து வருகிறது. ஆதலின், ஒழுக்கம் உயிரினும் சிறந்ததாகும் என்ற உண்மை 'உயிரினும்' என்ற சொல்லிற் புதைந்து காணப்படுகிறது.

உயிர் தன்னையுடையவனைத் தீவினையினும் செலுத்தித் துன்புறுத்தலாம். ஒழுக்கம் இவ்வாறு செய்யாமல் நல்வழியில் மட்டுமே செலுத்தி அவனுக்குப் பெயரும், புகழும், பெருஞ் சிறப்பும் தருகிறது. ஆதலின் ஒழுக்கம் உயிரினும் பெரிது என்ற இவ்வுண்மையை 'உயிரினும்' என்ற சொல் காட்டிக் கொண்டிருக்கிறது. நமக்கு நற்றுணை நல்லவர் என்றும், பக்தர்க்கு நற்றுணை பரமன் என்றும், சொல்லக் கேட்டிருக்கிறோம். அம்மாதிரி உயிர்க்கும் ஒரு துணை இருக்கிறது. உயிர்க்கு ஒரு துணையும், உறுதுணையும் ஆவது உலகில் வேறு எதுவுமில்லாமல் ஒழுக்கம் ஒன்றே ஆகும். ஆதலின் உயிர்க்குத் துணையாகின்ற ஒழுக்கம் உயிரினும் சிறந்ததாகிறது என்ற இவ்வுண்மையை, உயிரினும் என்ற சொல்லால் அறிந்து மகிழலாம்.

உயிரை இழந்துவிட்ட ஒருவன் உண்மையான பழியைக் கூட இழந்துவிடுகிறான்! இது இவ்வுலகில் இன்றும் நாம் காணும் உண்மையாகும். ஆனால், ஒழுக்கத்தை இழந்துவிட்ட ஒருவன் தான் செய்யாத பழிபாவங்களைக் கூடச், செய்யவில்லை என்று சொன்னாலும் உலகம் ஒப்பாது. ஆதலின், அவன் இல்லாத பழியையும் ஏற்க நேரிடும். ஆதலின், உயிரினும் சிறந்தது ஒழுக்கம் என்றாகிறது. இவ்வுண்மையை, உயிரினும் என்ற சொல்லிற் கண்டு மகிழுங்கள்.

படி இல்லாமல் மாடியும் ஏறலாம்; கால் இல்லாமல் நடந்தும் செல்லலாம். ஆனால் ஒழுக்கமில்லாமல் உயர்வடையவே முடியாது. ஆதலின், துன்பம் துயரம் வறுமை ஆகிய இடுக்கண்கள் எத்தனை வந்தாலும் சிறிதும் தளராமல் ஒழுக்கத்தைக் காப்பாற்றியாக வேண்டும். உயிரே போவதாயினும் அஞ்சாது, வீரத்தோடு நின்று போராடி, ஒழுக்கத்தைக் காப்பாற்றியாக வேண்டும் என்பது வள்ளுவர் பெருமானின் கருத்து. இதுகாறும் கூறிய இவைகளைக் கொண்டு,

> ''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
> உயிரினும் ஓம்பப் படும்''

என்ற குறளின் பெருமையும், உயிரினும் என்ற சொல்லின் சிறப்பும், உயிரின் தன்மையும், ஒழுக்கத்தின் உயர்வும் ஒருவாறு விளங்கியிருக்கலாம். இதுபோன்றே பிற குறள்களிலும் புதைபொருள்களைக் காணலாம். ஆகவே நீங்கள் திருக்குறளைப் படியுங்கள். புலவனாக விளங்க அல்ல; பேச்சாளியாக இருக்க அல்ல; ஒழுக்கமுள்ளவனாக நடக்கப் படியுங்கள். படித்து அதன்படி ஒழுகுங்கள். வாழட்டும் தமிழ்ப் பண்பு!.



# திருமால் திருவுருவங்கள்

''திருமால்நெறிச் செல்வர்''

திரு. என். எஸ். தாத்தாசாரியார், திருச்சி.

''தமர்உகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமர்உகந்த தெப்பேர் மற்றப்பேர்—தமருகத்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையா திருப்பரே
அவ்வண்ணம் ஆழியா னாம்''

### முன்னுரை :

பக்தர்கள் தன்னைத் தத்தம் நிலைக்கு ஏற்ப வழிபட்டு உய்வதற்காகத் திருமால் ஐந்து நிலையில் நின்று தரிசனம் தருகிறார் என வைணவ ஆகமநூல்கள் கூறுகின்றன. அந்த ஐவகை நிலையினுள், ''அர்ச்சாவதாரம்'' என்ற வழிபாட்டுக்குரிய உருவ நிலையும் ஒன்றாகும். இந்நிலைக்கே ஏற்றமும் அதிகம் என்பார்கள். அந்த உருவ நிலைகளின் அமைப்புக் களைப் பற்றிப் பழைய நூல்கள் விரிவாகக் கூறியுள்ளன. சிலவற்றை ஈண்டுக் காணலாம்.

சிவபெருமானின் உருவங்களைப் பற்றிக் கூறும் நூல்கள் பல உள்ளமைபோல, திருமாலின் உருவங்களைப் பற்றிய விளக்கம்உரைக் கும் நூல்கள் அவ்வளவு இல்லை. ஆயினும், பழைய வைகானச ஆகமநூல்களில் சிறப்பாகவும், பாஞ்சராத்திர ஆகமநூல்களில் குறிப்பாகவும், உருவவிளக்கம் கூறப்பட்டுள்ளது. தென்னிந்தியத் திருமால் வடிவங்கள் பெரும்பாலும் ஆகமநூல் வழியில் அமைந்தவைகளே யாகும். ஆகம முறைப்படிக்குத் திருமால், ஆலயங்களில் நின்ற, இருந்த, கிடந்த திருக்கோலங்களில் அமைய வேண்டும். இவைகள் யோகம்போகம் வீரம் ஆபிசாரிகம் என நான்குவிதமாக அமையலாம். யோகிகள் யோகமூர்த்திகளையும், குடும்பத்தில் உள்ளவர்கள் போகமூர்த்திகளையும், வீரர்கள் வீரமூர்த்திகளையும், பகைவர்களுக்குத் துன்பம் இழைக்க விரும்புகிறவர்கள் ஆபிசாரிக மூர்த்தியையும் வணங்குவார்கள். ஆக இவை மொத்தம் பன்னிரண்டு பிரிவுகள் கொண்டவை. மேலும் இப்பன்னிரண்டு மூர்த்திகள், உபமூர்த்திகளுடன் முதல் இடை கடை என்று மூன்று பிரிவுகளாக முப்பத்தாறு மூர்த்தங்களாக அமையும். இன்று பழக்கத்தில் திருமால் வடிவங்கள் போக மூர்த்திகளாகவோ, அல்லது யோகமூர்த்திகளாகவோ அல்லது யோக போக மூர்த்திகளாகவோதான் காணப் படுகின்றன.

வீரமூர்த்திகள் அருமை. ஆபிசாரிக மூர்த்தங்கள் இன்று இல்லவே இல்லை என்று கூறலாம். இதனை வேண்டும்பொழுது அமைத்து அழித்துவிடுவதும் உண்டு.

### அயல்நாட்டில் விஷ்ணு வடிவம் :

''விஷ்ணு'' என்ற சொல்லுக்கு, எங்கும் பரந்தவர், நன்மை தருகிறவர், மாயையிலிருந்து அகற்றுபவர், எல்லாப் பொருள்களின் உயிர்நாடியாய் இருப்பவர் என நான்கு வகைப் பொருள் உண்டு. இந்தவிஷ்ணுவின் சிறப்பும், அவரது வடிவங்களும் அயல் நாடுகளிலும் உண்டு. சிறப்பாகச் சீனா, ஜப்பான் என்ற இடங்களில் திருமால் புத்தர் பெருமானாக வடிவக் காட்சி தருகிறார். சம்ப்பா, காம்போஜம், சயாம், சுமத்ரா, ஜாவா முதலிய நாடுகளில் நாராயணன், அரி, கோவிந்தன் என்ற பெயர்களால் திருமாலே முழுமுதற் கடவுளாக முன்பு வழிபடப்பட்டிருக்கவேண்டும் என்பது ஆராய்ச்சியாளர்களின் உறுதி.

### பலவகையான வடிவங்கள் :

தமிழ் நாட்டில் இன்று உள்ள திருமால் உருவங்கள் எல்லாம் பெரும்பாலும் 7-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவைகளே. பிருகத் சம்மிதை என்ற பழைய வடமொழி நூலில் (கி.பி.400) உருவ இலக்கணங்கள் ஐந்து செய்யுள்களிலே கூறப்பட்டுள்ளன. அவைகளாவன: திருமாலின் திருமேனியில் கைகள் எட்டு அல்லது நான்கு அல்லது இரண்டு இருக்கலாம். எட்டுக் கைகளானால், வலக்கைகளில் கத்தி கதை அம்பும், இடக்கைகளில் வில் கேடயம் சங்கு சக்கரமும், ஒரு வலக் கை அபய முத்திரையுடனும் இருக்கும். நான்கு கைகளானால், வலக்கை அபய முத்திரையுடனும், கதையுடனும், இடக் கைகளில் சங்கு சக்கரமும் இருக்கும். இரண்டு கைகளானால், வலக்கை அபய முத்திரையுடனும், இடக்கை சங்கேந்தியும் இருக்கும். இந்த வடிவங்கள் மார்பில் ஸ்ரீவத்சம் என்ற மருவுடனும், கௌஸ்துபம் என்ற ஆபரணத்துடனும், காதுகளில் கடுக்கன்களும், தலைமேல் முடியும் (கிரீடம்) துலங்க இருக்க வேண்டும். திருமுக மண்டலம் கம்பீரமாகவும், புன்சிரிப்புடனும் இருக்கவேண்டும் என்பதேயாகும்.

பழைய விஷ்ணு சிற்பங்களுக்குச் சீதேவி, பூதேவி என்ற இரு பிராட்டியர்கள் மருங்கே

இருப்பதில்லை. ஆயசிர்ஷம் என்னும் பாஞ் சாத்திர நூலில் நான்கு கைகளுடன் கூடிய விஷ்ணுவின் வடிவம் கீழ்வருமாறு அமைக்கப் படவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

வலப்பக்கத்து மேல்கையில் சக்கரம், கீழ்க் கையில் தாமரைப்பூ. இடப்பக்கத்து மேல் கையில் கதை, கீழ்க் கையில் சங்கு, இருபக்க மும் ஸ்ரீயும், புஷ்டியும், கையில் தாமரைப் பூவும் வீணையும் பிடித்து விஷ்ணுவின் தொடை அளவிற்குச் சற்றுச் சாய்ந்திருக்கும் என்பதா கும். மற்றும் இதைப்பற்றிய சிறப்புகளும் இயல்புகளும், மந்தனாவின் ரூபமந்தனம், ஹேமாத்ரியின் விரத காண்டம் போன்ற நூல் களில் காணப்படும். சில இடங்களில் நிற்கும் விஷ்ணு மூர்த்திகள் நான்கு முகங்களுடன் காணப்படும். முக்கியமாக இந்தியாவின் வட கோடிப் பகுதிகளிலும், கீழ் மத்தியப் பகுதி களிலும் ஓரளவிற்கு அவைகள் காணப்படும். அவைகளில் சில நான்கு, எட்டு, பன்னிரண்டு கைகள் கொண்டவை. இவைகள் குசான் காலத் திற்குப் பிறகு பல மாறுதல்களைப் பெற்று விட்டன என்பர். விஷ்ணு தர்மோத்தரம் என்ற நூலின் கருத்துப்படிக்கு, விஷ்ணு கருடன்மேல் நான்கு முகங்களுடனும், எட்டுக் கைகளுடனும் வீற்றிருக்கும் திருக்கோலத்தில் அமையலாம். கிழக்கு முகம் சாந்தம் உள்ளதாகவும், தெற்கு முகம் நரசிங்கமுகமாகவும், மேற்கு அதாவது பின்பக்கமுகம் கபிலர் முகமாகவும், வடக்கு முகம் வராக முகமாகவும் (வராக அவதாரம் என்பதற்குப் பன்றி அல்லது காண்டாமிருக வடி வம் என்றும் சிலர் கூறுவதுண்டு) காணப்படு கின்றன. அடுத்தபடியாக உட்கார்ந்த விஷ்ணு சிற்பங்கள் நிற்கும் கோலங்களைவிடக் குறை வாக உள்ளன. அவைகள் ஆதிசேஷன்மீதோ, கருடன் மேலோ, பத்மாசனத்திலோ தனித்தோ அல்லது தேவிமார்களுடனோ காணப்படும்.

வடநாட்டில் சில இடங்களில் அமர்ந்த விஷ்ணுவின் வகைகளில் பலப்பல தென்படுகின் றன. சிவபெருமான் வடிவமான உமாமகேசு வர மூர்த்தியைப்போல இலட்சுமிநாராயண மூர்த்தங்களை அமைப்பதுண்டு. அவைகள் வலக்காலைத் தொங்கவிட்டு, இடக்காலை மடித்து ஆசனத்தின்மேல் வைத்துக்கொண்டு, அந்தத் திருவடியில் இலக்குமியை உட்கார வைத்திருக்கும் வகையில் இருக்கும். அல்லது இலக்குமி இல்லாமலும் மேலே குறித்தபடிக்கு வடிவம் இருக்கும். பெரும்பாலும் திருமாலின் அமர்ந்த அழகான வடிவங்களே அதிகம். சய னத் திருக்கோலங்கள் அரிதாயினும் அவை எட்டு வகைப்படும். அவை உத்தியோகம் தருப் பசயனம் புஜங்கசயனம் போகசயனம் மாணிக்கசயனம் வடபத்திரசயனம் வீரசயனம் தலசயனம் என்பவையாகும். இவைகளின் தோற்றங்களில் சில நுணுக்கமான மாறுபாடு கள் உண்டு. பள்ளிகொண்ட அரங்கநாதர் வடி வம் சில உண்டு. அந்த மூர்த்திகள் பிரளய காலத்தில் உண்டாகும் சக்திகள் யாவும், பரம் பொருளை ஸ்ரீமந் நாராயணனை அடைந்து, மறுபடியும் அவன் சங்கல்பத்தால் இந்தச் சக்தி கள் யாவும் தோன்றுகின்றன என்பதைக் குறிக் கும்.

### திருமாலின் இருபத்துநான்கு வடிவங்கள் :

விஷ்ணு தர்மோத்திரத்தல் கூறியுள்ளபடி சங்கர்ஷணன் பிரத்யும்நன் அநிருத்தன் வாசு தேவன் ஆகிய நால்வரையும் திருமாலின் நான்கு தனித்தனிப் பிரிவுகளாகக் கொள்ள லாம். இவைகளை வியூக மூர்த்திகள் என அழைப்பார்கள். இந்த நான்கு மூர்த்திகளை யும் நான்கு முகங்கள் எட்டுக்கைகள் கொண்டு ஒரே மூர்த்தியான அமைப்பில் கருதலாம். இந்த வடிவில் உள்ள கிழக்குப் பக்கமும் சிரிப் புடன் கூடிய வாசுதேவனாகும். தெற்கு நோக் கிய சிங்கமுகம், சங்கர்ஷணன். வடக்கு முகமாக வராகம் பிரத்யும்நன். பின்பக்கமாய் மேற்குப் பார்த்திருக்கும் ருத்திர முகம் அநிருத்தன் என் பதாம். இந்த வியூக வடிவத்தில் நான்கு நான்கு பிரிவுகளுடன் மொத்தம் இருபத்து நான்கு அமைப்புகள் கணக்கிடப்பட்டுள்ளது. இதன் விபரம் மகாபாரதம் அநுசாசன பர்வத் தில் கூறப்பட்டுள்ளது. பொதுவாகத் திருமா லின் ஆயிர நாமங்களில் 24 நாமங்களின் விளக்கமே மேலே கூறப்பட்டுள்ளது. அந்த 24 நாமங்களின் விளக்கமே மேலே கூறப்பட் டுள்ள 24 முகங்களின் அமைப்பாகும். இந்த 24 முகங்களுக்குத் தக்கவாறு ஆயுதங்களும் 24 உண்டு என்கிறது பழைய ஆகம நூல்.

### தசாவதார உருவ அமைப்புகள் :

அவதாரம் என்ற சொல்லிற்குப் பரம் பொருள் மக்களுடன் இணைந்து கலந்திருக்கத் தாழ வந்து அருள் பாலிப்பது எனப் பொருள். அவைகள் பூரணம் ஆவேசம் அமிசம் என்று மூன்று வகைப்படும். பத்து அவதாரங்களில் இராமனும் கிருஷ்ணனும் பூரண அவதாரங் கள். சில காலத்திற்குச் சில குறித்த செயலைச் செய்யத் திருமால் தனது சக்தியின் ஒருசிறு பகுதியைத் தான் விரும்பிய வஸ்துவிற் செலுத் தலாம். இதற்கு ஆவேசம் எனப் பெயர். பரசுராம அவதாரமே இதற்குச் சான்று. அமி சாவதாரங்களே ஆழ்வார்கள் போன்றமகான் களின் தோற்றங்களாகும். திருமாலின் அவ தாரங்கள் எண்ணற்றவைகளே யாயினும், பத்து அவதாரங்கள் மிக முக்கியமாகும். இந்தப் பத்து அவதாரங்களின் அமைப்புகள் பலமுறை யில் இருக்கின்றன. அவை எப்படி என்பதைச் சிறிது பார்ப்போம்.

**மச்சம்-மீன், கூர்மம்-ஆமை.** இந்த இரண்டு அவதார உருவங்கள் முழுவதும் மீனா கவோ, ஆமையாகவோ காட்டப்படலாம். அல் லது மேல் குதி கிரீடத்துடனும், நான்கு கை கள் கொண்ட மனிதன்போலவும், கீழ்ப்பகுதி மீன் ஆமை ஆகியவற்றின் அமைப்பிலோ இருக் கலாம். வராக அவதாரத்தின் அமைப்போ பல விதம். பன்றித் தலையுடன் நான்கு கைகளுடன் மனித உடலுடன் இருக்கலாம். ஸ்ரீமுஷ்ணத் தில் எம்பெருமான் இந்தமாதிரிதான் சேவை தருவார். திருவிடவெந்தையில் பெருமாள் வராகத் திருமுக மண்டலத்துடன், பூமிப் பிராட்டியை இடது பக்கத்தில் தொடையில் அமர்த்திக்கொண்டும், அணைத்துக்கொண்டும் சேவை தருவார். இவருக்குப் பூவராகன் என்ற

திருநாமம். வங்காளத்தில் வராகப் பெருமாள் ஒரு பக்கமாகப் பார்த்துக்கொண்டு சிங்கம் போன்ற முகத்துடன், முற்கால வடிவங்களின் அமைப்பில் தென்படுகிறாராம். சில சமயம் பரமபதநாதன் போல் அமர்ந்து தேவியை மடியிலோ, அருகிலோ வைத்துக் கொண்டிருப்பது போலவும் அமைக்கலாம். இவருக்கு யக்ஞ வராகன் என்று திருநாமமாகும். நரசிங்க அவதாரத்தின் சிறப்பினையும் அமைப்பையும் பற்றி விஷ்ணு தருமோத்திரம் என்னும் நூல் நன்கு உரைக்கிறது. இது சிங்க முகத்துடனும், மனித உடலுடனும் இரணியனை மடியில் இட்டுக் கொண்ட தோற்றமும் 4, 6, 8 கைகள் கொண்ட தோற்றமும் கொண்டதாகும். 12, 16 திருக்கைகள் கொண்ட வடிவங்களும் உள.

யோக நரசிம்மன், கிரிஜா, தாணு (லட்சுமி நரசிம்மன்) போன்றவர்கள் யோகாசனத்தில் இருப்பதாகவும், குகையிலிருந்து வருவது போலவும், தூணில் இருந்து வருவது போலவும், சிங்க முகத்துடன் அமைக்கப் பெற்றிருக்கலாம். கருடன் மேலும் ஆதிசேடன் மேலும் அமர்ந்திருக்கும் நரசிம்ம வடிவங்களும் உண்டாம். வாமன அவதார வடிவம் இரண்டு வகைகளில் இருக்கலாம். குள்ளமான பிரம்மசாரி ஒன்று ஓங்கி உலகளந்த வடிவம் ஒன்று, வைகானச ஆகமப்படி திருவிக்கிரமன் திருவடிகளில் தூக்கி இருப்பது ஊன்றிய திருவடியான முட்டு வரையிலோ, நாபி வரையிலோ, திருமுடிவரையிலோ இருக்கலாம். 4, 8, திருக்கைகள் அமைக்கப்படலாம். பரசுராம அவதாரத்தில் 2, 4 கைகள் இருக்கும். கோடரியே இவருடைய ஆயுதம். இராம அவதாரத்தில் வில்லும் அம்பும் ஏந்திய கைகளே அடையாளமாகும். இராமனுடைய வடிவங்களில் நான்கு திருக்கைளும் உண்டு.

பலராம அவதாரத்தில் இவருடைய முக்கிய ஆயுதம் கலப்பை. உலக்கையும் ஆயுதமாக இருக்கலாம். சில சமயம் கருடன்மேல் அமர்ந்திருப்பதாகப் பலராம வடிவத்தைக் காட்டுவதுண்டு. நான்கு திருக்கைகள் இவருக்கு அமைக்கப்பட்டால், அப்பொழுது கலப்பை, உலக்கை, சங்கு, சக்கரங்கள் அத்திருக்கைகளின் ஆயுதங்களாகும். தசாவதார வரிசையில் இவர் எழுந்தருளி இருக்கும்பொழுது, ஒரு கையில் கலப்பையும், மற்றொரு கையில் அபயஅல்லது வரத முத்திரையுடன் பலபத்திரர் சங்கர்ஷணன் என்றெல்லாம் திருநாமங்கள் ஆகும்.

கிருஷ்ணன்: பத்து அவதாரங்களில் இவரே மிகவும் புகழ்பெற்றவர். இவரது அருச்சை வடிவங்களின் தோற்றங்கள் எண்ணற்றவை. கல்கி அவதாரம். இதுவே கடைசி அவதாரம். இந்த அவதாரத் தோற்றத்தைப் பலபடியில் காட்டலாம். முகம் குதிரையின் முகம்போல் அதாவது மனிதனது போல் இருக்க, திருக்கைகள் 2, 4 கொண்டவைகளாக அமைக்கலாம். குதிரைமேல் அமர்ந்து பட்டாக் கத்தியுடன் வருவது போலும் அமைப்பார்கள். ஒரு கையில் கத்தியும், மற்றொரு கையில் குதிரையின் கடிவாளமும் இருக்கும். அல்லது வில்லும் அம்பும் இருக்கும். இவ்வாறு திருமாலின் பிம்ப உருவ அமைப்பில் மேலும் பற்பல அமைப்புகளும் உண்டு. சுருக்கமாக இதில் எழுதியபடி.

---

## நவசக்திகள்

திருவாசகத்தில் வரும் திருவெம்பாவைப் பாடல்களை அனைவரும் அறிவர். திருவெம்பாவை என்பது மனோன்மணி சர்வபூததமனி பலப்பிரதமனி கலவிகரணி பலவிகரணி காளி இரவுத்திரி சேட்டை வாமை என்னும் நவசக்திகளின் செயலைக் குறிக்கின்றது என்பர். அதனாலேயே 'சத்தியை வியந்தது' என அதற்கு நுண்பொருள் தலைப்புக் கொடுக்கப் பெற்றிருக்கின்றது. சக்தி ஒன்றே பலவாறு வடிவபேதங்கள் கொண்டு, வெவ்வேறு தொழில்களை இயற்றி உயிர்கட்கு நலம்புரியும் என்பது கருத்து. இந்நவசக்திகளின் இயல்புகள் செயல்கள் வருமாறு:-

(1) மனோன்மணி, பக்குவம் எய்திய உயிர்களை மலத்தினின்று நீக்கிச் சிவத்துடன் சேர்க்கும். (2) சர்வபூத தமனி, உயிர்களிலெல்லாம் ஒன்றி உடன்கலந்து நின்று, அவற்றின் புண்ணிய பாவங்களை அகற்றிவிக்கும். (3) பலப்பிரதமனி, சூரியனிடத்தில் பதிந்து நின்று தீய கிருமிகளை அழித்து, நல்ல பொருள்கள் பெருகி வளர்வதற்கு ஆக்கம் அளிக்கும். (4) பல விகரணி சந்திரனிடத்தில் நிலைபெற்ற அமுதத்துளிகளைச் சொரிவித்துப் பயிர்பச்சைகளும் உயிர்த்தொகுதிகளும் தழைத்துச் செழித்தோங்க உதவி செய்யும். (5) கலவிகரணி வானத்தில் இருந்து, எல்லா பொருள்களையும் ஏற்று நின்று அவை தன்னிற் கலந்து இணைய இடம் தந்து நிற்கும். (6) காளி, காற்றின்கண் கலந்து பிராணமயமாய் விளங்கி, உயிர்களுக்கு நலம் விளைவிக்கும். (7) இரவுத்திரி, நெருப்பின்கண் தங்கி அதற்கு வெப்பம் அளித்து நிற்கும். (8) சேட்டை, நீரில் நிலைபெற்று, அதற்குக் குளிர்ச்சியும் சுவையும் உண்டாக்கும். (9) வாமை, மண்ணில் விளங்கி ஐம்பூதங்களின் இயல்புகளும் செயல்களும் நிகழுமாறு செய்யும்.

—ஆசிரியர்.

# விநாயகர் பெருமை

ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

**முன்னுரை :**

இந்து மதத்திற்குரிய கடவுளர் பலருள் விநாயகர் மிக்க முதன்மையும் சிறப்பும் உடையவராகத் திகழ்கின்றார். இந்து மதத்தைச் சேர்ந்த அன்பர்கள் எவரும் எந்தச் செயலைத் தொடங்குவதாக இருந்தாலும் விநாயகரையே முதலில் வணங்கித் தொடங்கும் வழக்கம் உடையவராக உள்ளனர். 'முன்னவனே யானை முகத்தவனே' என இராமலிங்க அடிகள் குறிப்பிடுதல் காணலாம். திருவள்ளுவர் தமது திருக்குறளின் முதற்குறளில் 'ஆதிபகவன்' எனச் சுட்டியது, முதலில் தொழப்பெறும் கடவுளாகிய விநாயகரையே குறிப்பதாகவும் கொள்ள இடமுண்டு.

**தொன்மையும், முதன்மையும் :**

மக்கள் முதன்முதலில் தோன்றிய இடம் மலையும் மலையைச் சார்ந்த நிலமாகிய குறிஞ்சித் திணையே என்பர் ஆராய்ச்சியாளர். யானை குறிஞ்சி நிலத்திற்குரிய விலங்காதலின், முதன் முதல் தோன்றிய மனித குலத்தினர், முதன் முதலில் யானை முகமுடைய விநாயகரையே தொழத் தொடங்கினர் போலும்! விலங்குகளுள் யானையானது ஏனைய எல்லா வற்றிலும் பெரியதாதல் போல, யானை முகமுடைய விநாயகர் ஏனைய எல்லாக் கடவுளரிலும் மிக்க சிறப்பும் முதன்மையும் உடையவர் எனக் கருதப் பெற்றார் என்பது புலனாகின்றது.

'ஓசை ஒலியெல்லாம் ஆனாய் நீயே' என்றபடி, எல்லா ஓசை ஒலிகளுக்கும் மூலமுதலாகத் திகழ்வது, பிரணவம் என்னும் ஓங்காரமேயாகும். அம் மூல முதல் ஒலியினின்றே எல்லாப் பொருள்களும் உலகங்களும் தோன்றுவன வாயின என்பர் ஞானிகள். நம் உடலின் அமைப்பு, நம்முடைய காது, இருதயம், இரைப்பை, கருப்பை முதலிய உறுப்புக்களும் பிறவும், ஓங்கார வடிவினவாகவே இருத்தல் காணலாம். சங்கு முதலிய இயற்கைப் பொருள்களும் அவ் வடிவினவாகவே காணப்படுகின்றன. இவ்வாற்றால், உலகத்தின் தோற்றமும் இயக்கமும் ஓங்காரத்தினாலேயே நடைபெறுகின்றன என்பதனை, ஞானிகள் நன்கு கண்டுணர்ந்தனர். தாம் கண்ட இவ்வுயரிய உண்மையினை, எளிய பாமர மக்கள் எல்லோரும்கூட உணர்ந்து உய்யும் பொருட்டு, முழுமுதற் பரம்பொருளை அவ்வோங்கார வடிவினதாக, இயற்கையில் அமைந்து தோன்றும் யானைமுகம் கொண்டுள்ளதாகவே, ஞானிகள் உருவகம் செய்துகாட்டி உணர்த்துவாராயினர் எனலாம்.

**பிற நாடுகளில் :**

யானை முகமுடைய விநாயகப் பெருமான் இந்து மதத்தில் மட்டுமேயன்றி, சமணம் பௌத்தம் ஆகிய மதங்களிலும் சிறப்பாகப் போற்றி வழிபடப் பெறுகின்றார். இவரது வழிபாடு, நமது இந்திய நாட்டில் மட்டுமேயன்றி, நேபாளம், திபெத்து, பர்மா, சயாம், இந்தோசீனா, சீனா, ஜாவா, பாலி, போர்னியோ, ஜப்பான், கொரியா முதலிய நாடுகளிலும், சிறப்புற நிகழ்கின்றது. சமன்லால், (Chaman Lal) என்னும் ஆசிரியர், 'இந்து அமெரிக்கா' (Hindu America) என்னும் தமது நூலில், அமெரிக்கா நாட்டில் பெரு, மெக்சிகோ முதலிய பகுதிகளிலும், விநாயகர் வழிபாடு இருந்தமைக்குரிய சான்றுகள் பல காணப்படுகின்றன என்று குறிப்பிடுகின்றார். ஜப்பானிய மக்கள் விநாயகரை 'Kon-kitten' என வழங்குகின்றனர். சைனாவில் பாறையில் அமைக்கப்பெற்ற 'King-Hsein' (கி.பி. 531) என்னும் கோயிலில், விநாயகர் திருவுருவம் காணப்படுகின்றது. கி.மு. 2-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தனவாகக் கருதப் பெறும் அமராவதிச் சிற்பங்களுள் விநாயகர் திருவுருவம் காணப்படுகின்றது என்று பர்ஜெஸ் (Burjess) என்னும் அறிஞர் கூறுகின்றார். ஆப்கானிஸ்தானத்தில் மிகப் பழமை வாய்ந்த விநாயகர் திருவுருவங்கள் இரண்டு, தொல்பொருள் ஆராய்ச்சி அறிஞர்களால் அண்மையில் கண்டு பிடிக்கப்பெற்றுள்ளன. நேபாளத்தில் பஞ்சமுக விநாயகர் மிகுதியாகப் போற்றப்படுகின்றார். ஜாவாத்தீவில் பழங்காலத்தில் சைவம் வைணவம் பௌத்தம் ஆகிய சமயங்கள் மிகுதியாகப் பரவியிருந்தன. கி.பி. 13-ஆம் நூற்றாண்டு முதல் இசுலாமிய சமயமே பெரிதும் தலையெடுத்தோங்கியது. எனினும் இன்னும் அங்கே, விநாயகரின் செல்வாக்கு மக்களிடையிற் சிறிதும் குன்றாமல் நிலவி வருகின்றது.

ஜேனஸ் (Janus) என்னும் உரோமக் கடவுளுக்கும், நமது துவிமுக கணபதி வடிவத்திற்கும், நெருங்கிய ஒற்றுமை காணப்படுகின்றது. நமது கூத்தாடும் விநாயகருக்கும், நடனமாடுகின்ற தயோனிசஸ் (Dionysus) என்னும் அயோனியக் கடவுளுக்கும் இடையே பல ஒப்புமைகள் காணப்படுகின்றன. நம் இந்திய நாட்டோடு உரோமரும் யவனரும் மிகப் பழங்காலத்திலேயே வாணிகத் தொடர்புகள் கொண்டிருந்தனர் என்பது வரலாற்று நூல்களில் புலனாதலின், நம்முடைய விநாயகர்

வழிபாடு அங்கெல்லாமும் பரவியிருந்தது என வும் ஒருவாறு நாம் கொள்ளுதல் கூடும்.

**தத்துவ நுட்பம் :**

விநாயகரின் திருவுருவம், எத்தனையோ பல தத்துவ நுட்பங்களை உணர்த்திக் கொண் டிருக்கின்றது. விநாயகரின் திருவுருவத்தில் நாபி பிரமனையும், முகம் திருமாலையும், முக் கண் சிவபிரானையும், இடப்பக்கம் சக்தியை யும், வலப்பக்கம் சூரியனையும் குறிப்பதாகப் பெரியோர் கூறுவர். விநாயகரின் ஐந்து திருக் கைகளில் உள்ள பொருள்களுள், பாசம்படைத் தலையும், அங்குசம் அழித்தலையும், ஒற்றைக் கொம்பு காத்தலையும், துதிக்கை மறைத்த லையும், மோதகம் அருளலையும், உணர்த்துவ தாக நூல்கள் நுவலும். விநாயகர் விலங்குத் தலையும், மனித உடலும், தேவர்க்குரிய பாதங்களும் பெற்றுத் திகழ்கின்றார். ஆணும் பெண்ணுமாக அமைந்து திகழ்வது உலகம் என்பதனைச் சுட்டும் முறையில், ஒடிந்த தந் தத்தையுடைய இடப் பகுதி பெண்கூறாகவும், வலப்பகுதி ஆண் கூறாகவும் கொண்டு விநாய கர் விளங்குகின்றார். விநாயகர் அறுவடைக் குரிய கடவுள் என்றும், அதுபற்றியே அறு வடைப் பயனை அழிக்கும் பெருச்சாளியை அடக்கி ஊர்தியாகக் கொண்டுள்ளார் என்றும் கூறுவர். இங்ஙனம் முரண்பாடுகள் பலவற்றை யும் ஒருங்கியைத்துக் கொண்டுள்ள விநாயக ரின் வடிவம், அத்துவைத சித்தாந்த தத்துவ நுட்பத்தினைக் காட்டிக் கொண்டிருக்கிறது என்று 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த நல்லகவி என்னும் அத்துவைத தத்துவாசாரி யர் பாடியுள்ளார்.

**நூல்கள் :**

விநாயகர் வழிபாடு கி.பி. 6 அல்லது 7-ம் நூற்றாண்டிற்குப் பின்னரே தமிழ்நாட்டிற் பர வத் தலைப்பட்டது என ஆராய்ச்சியாளர்கள் கூறுவதுண்டு. எனினும், திருஞானசம்பந்தர், நம்பியாண்டார் நம்பிகள், கபிலதேவர், அதிரா அடிகள், மெய்கண்டார், ஔவையார், கச்சி யப்ப முனிவர் முதலிய தமிழ்ச் சான்றோர்கள் பலர், விநாயகரைத் துதித்து வழிபட்டுள்ளனர். கச்சியப்ப முனிவர் தமிழிற் பாடியுள்ள விநாயக புராணம் பெரும் புகழ்பெற்ற தொன்றாகும்.

**திருவுருவங்கள் :**

விநாயகரின் திருவுருவை, வெவ்வேறு வகைகளில் வெவ்வேறு நிலைகளில், சிற்பநூல் கள் சிறப்புற அமைத்து விளக்கியுள்ளன. சிற்ப நூல்களில் பின்வருமாறு விநாயகரின் 32 திரு வுருவங்கள் குறிப்பிடப்பெற்றிருக்கின்றன. அவையாவன:—

(1) பாலகணபதி (2) திருணகணபதி (3) பக்த கணபதி (4) வீரகணபதி (5) சக்திகணபதி (6) துவிஜ கணபதி (7) சித்தி (பிங்கல) கணபதி (8) உச்சிஷ்ட கணபதி (9) விக்கினராஜகணபதி (10) பிப்ர கணபதி (11) ஏரம்ப கணபதி (12) லட்சுமிகணபதி (13) மகாகணபதி (14) விஜய (புவனேச) கணபதி (15) நிருத்த கண பதி (16) ஊர்த்துவகணபதி (17) ஏகாட்சர கணபதி (18) வரகணபதி (19) திரியட்சர கண பதி (20) கிப்ரப்பிரசாத கணபதி (21) அரித் திரகணபதி (22) ஏகதந்த கணபதி (23) திருஷ்டி கணபதி (24) உத்தண்ட கணபதி (27) துவிமுககணபதி (28) திரிமுக கணபதி (27) சிம்மகணபதி (30) யோககணபதி (31) துர்க்கா கணபதி (32) சங்கடஹர கணபதி.

**அற்புதச் சிற்பங்கள் :**

இங்ஙனமே, விநாயகரின் அற்புதமான அழகிய சிற்பத் திருவுருவங்கள் பற்பல இடங் களில் காணப்பெறுகின்றன. அவைகளைப் பற்றிய சிறு குறிப்புக்கள் வருமாறு:

(1) நேபாளத்திலும், இந்தோசைனா விலும், நான்கு முகங்களை உடைய விநாயகர் திருவுருவங்கள் மிகுதியாகக் காணப்படுகின் றன.

(2) பிரிட்டிஷ் பொருட்காட்சிச் சாலை யில், ஐந்து முகங்களுடனும் பத்து கரங்களுட னும், 'மகாராஜ லீலாசனம்' என்னும் நிலை யில், தாமரை மலரை ஏந்திய இடக்கையை உடைய வல்லபை என்னும் சக்தியைத், தமது இடப்பக்கத் தொடையில் அமரச் செய்து தழுவிக் கொண்டு உள்ள, ஏரம்ப கணபதியின் திருவுருவம் காணப்படுகின்றது.

(3) சுசீந்திரம் தாணுமாலயப் பெரு மான் கோயிலில், அம்மையின் சந்நிதிக்கு எதிரே விநாயகரின் பெண்மைத் திருவுருவம் (கணே சானி) உள்ளது. ஒரு காலை மடித்து, மற் றொரு காலைத் தரையில் ஊன்றிக் கொண்டு சுகாசன நிலையில், பாசம் அங்குசம் ஏந்தி, அபய வரத முத்திரைகளுடன், நான்கு கரங்கள் உடையதாக அத்திருவுருவம் விளங்குன்றது.

(4) ஜபல்பூருக்கு அருகே, பேரேகாட் என்னும் இடத்திலும், இத்தகைய கணேசானி யின் திருவுருவம் காணப்படுகின்றது.

(5) மதுரைக் கோயிலில், துவாரபாலக ருக்கு அருகே கம்பத்தடி மண்டபத்தில் வியாக் கிரபாத கணேசானி என்னும் திருவுருவம், இரண்டு கைகளுடன், ஒரு கையில் தாமரை மலர் ஏந்திக்கொண்டு, மற்றொரு கையை மீனாட்சி யம்மைபோல் தொங்கவிட்டுக் கொண்டு உள் ளது.

(6) வேலூர்க் கோட்டையில் சிற்பக்கலை நலம் செறிந்த திருக்கல்யாண மண்டபத்தில் நவநீத கிருஷ்ணரைப் போல அழகிய குழந்தை வடிவத்தில் விநாயகர் விளங்குகின்றார்.

(7) விநாயகருக்கு மூஷிகம் என்னும் பெருச்சாளியே வாகனம். அவருக்குச் சிங்கமும் வாகனமாகச் சில இடங்களில் காணப்படுகிறது. சிங்கத்தின்மீது அமர்ந்துகொண்டு, ஐந்து தலைகளுடன்கூடிய பஞ்சமுக விநாயகர், திருவொற்றியூர்த் தியாகேசுவரர் கோயிலிலும், நாகப்பட்டினம் காயாரோகணேசுவரர் கோயி லிலும், எழுந்தருளியுள்ளார். திருவொற்றியூ ரில் ஐந்து தலைகளும் ஒரே வரிசையில் உள் ளன. நாகப்பட்டினத்தில் நான்கு திசைகளி லும் நான்கு தலைகளும், மேலே ஒரு தலை யும் உள்ளது.

(8) மதுரை, திருச்செந்தூர், சிதம்பரம், குமரகோட்டம் முதலிய தலங்களில், முக்குறுணி விநாயகர் மிகப் பெரிய திருவுருவம் கொண்டு விளங்குகின்றார். இவருக்கு முக்குறுணி அரிசியில் மோதகம் செய்து படைக்கப்படுகிறது.

(9) தஞ்சை மாவட்டம் திருநள்ளாற்றில், சாளிக்கிராமம் என்னும் சிலை வடிவத்தில் விநாயகர் பூசிக்கப் பெறுகின்றார்.

(10) மைசூர் மாநிலத்தில் அளபீட் (துவாரசமுத்திரம்) என்னும் இடத்தில், ஒய்சளேசுவரர் கோயிலில் உள்ள, மிகச் சிறந்த வேலைப் பாடு உடைய நர்த்தன விநாயகர் திருவுருவம் கண்டு மகிழத்தக்கது.

(11) விநாயகர் திருவுருவங்களில், பொதுவாகப் பெரும்பாலும் துதிக்கையானது இடப்புறமாக இருக்கும். ஆனால் சுவாமிமலை என்னும் முருகன் தலத்திற்கு அருகேயுள்ள, திருவலஞ்சுழி என்னும் தேவாரப் பாடல் பெற்ற தலத்தில், வலப்புறமாகச் சுழித்துள்ள தும்பிக் கையுடன் கூடிய, வலம்புரி விநாயகர் திருவுருவம் மிகச் சிறப்பான முறையில் அமைந்திருக்கின்றது. சிற்ப வேலைப்பாடுகளிலேயே கடினமானதர்கப் புகழோங்கி உள்ள, திருவலஞ்சுழிப் பலகணியின் சிற்பத்திறனும், நாம் கண்டு களி துளும்பற்பாலது.

(12) மைசூர் மாநிலத்தில் உள்ள நஞ்சன்கூடு என்னும் இடத்தில், உச்சிஷ்ட (சக்தி) கணபதி என்னும் திருவுருவம் மிக்க சிறப்பான தொன்று. 'மந்திர மகார்ணவம்' என்னும் முறையில் இத்திருவுருவம் அமைக்கப்பெற்றுள்ளது என்பர்.

(13) விநாயகப் பெருமான் பொதுவாகக் கோயில்களில் பெரும்பாலும் திருச்சுற்றாலைகளின் முகப்பிலேயே, இடம்பெற்றிருப்பது வழக்கம். ஆனால் இராமநாதபுரம் மாவட்டத்தில், காரைக்குடியினின்று திருப்புத்தூருக்குச் செல்லும் வழியில், குன்றக்குடிக்கு அருகே பிள்ளையார்பட்டி என்னும் தலத்தில் உள்ள, பிள்ளையார் பட்டிக் கோயிலின், கருவறையிலேயே விநாயகர் மூலவராக எழுந்தருளியுள்ளார். வேறு எங்கும் இல்லாத முறையில் அவர் அங்கு இரண்டு திருக்கைகளுடன் மட்டும் காணப்படுகின்றார். விநாயகருக்குத் தமிழ்நாட்டில் முதன் முதலாக எடுக்கப்பெற்ற கோயில்களுள் இதுவே மிகப் பழமையானகோயில் என்பது அறிதற்கு உரியது.

(14) ஆந்திர மாநிலத்தில் திருப்பருப்பதம் என்னும் தேவாரப் பாடல் பெற்ற ஸ்ரீசைலத்தில், விநாயகரின் அழகிய திருவுருவம் கண்ண பிரானைப் போல வேய்ங்குழல் ஊதும் நிலையில், அமைந்து திகழ்கின்றது. . தமிழ்நாட்டிற் பவானி என வழங்கும் திருநணா முதலிய சில இடங்களில் விநாயகரின் வீணை ஏந்திய திருவுருவம் காணப்படுகின்றது.

(15) மகாராட்டிர மாநிலத்தில், பாலகங்காதரதிலகர் என்னும் தேசியப் பெருந் தலைவர், தேசப்பற்றை ஊட்டி மிகவும் வளர்க்கும் முறையில் விநாயக சதுர்த்தி விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாடுதற்குப் பெரிதும் ஊக்கம் அளித்தார். அம்மாநிலத்தில் மார்க்கோவன் என்னும் இடத்திலும், அதைச்சுற்றிலும், விநாயகருக்கென்று பல புகழ்பெற்ற கோயில்கள் அமைந்துள்ளன. அக்கோயில்களில் மயூரேச விநாயகர், சிந்தாமணி விநாயகர், விக்கினேசுவரர், விநாயகர், வல்லாளேசுவரர், கணபதி, கிரிஜத்மகர், சித்திவிநாயகர், என்னும் அஷ்ட விநாயகர்கள், கோயில் கொண்டுள்ளனர். தமிழ்நாட்டில் திருச்சிராப்பள்ளிக் குன்றின் மேல் உள்ள உச்சிப்பிள்ளையார் கோவிலும் மிக்க புகழ்வாய்ந்தது.

(16) காஞ்சிபுரத்தில், திருவோணகாந்தன் தளி என்னும் தேவாரப் பாடல்பெற்ற கோயிலில், கருவறை மண்டபத்தினது நுழை வாயிற் சுவரின் முகப்பில் விநாயகர் திருவுருவம்ஒன்று உள்ளது. அவர்தம் அருகே சென்று, நம் செவியை அணுகவைத்து நிற்பின், ஒருவகை ஓங்கார ஒலி ஒலித்துக் கொண்டிருப்பதைக் கேட்கலாம். இத்திருவுருவை அமைத்த சிற்பக் கலைஞர் யாரோ? சிலையில் அமைந்த திருவுருவில், எங்ஙனம் இவ்வகை ஒலி எழுகின்றது என்பது வியப்பாக உள்ளது! எத்தனையோ நெடுங்காலமாக, எத்தனையோ பல்லாயிரக் கணக்கான மக்கள், இவ்வொலியைக் கேட்டு மகிழ்ந்து வியந்து வணங்கிச் செல்லுகின்றனர்.

(17) விநாயகப் பெருமானைப் பெரும்பாலும் திருமணம் ஆகாத பிரம்மசாரி நிலையினராகவே, பொதுமக்கள் கருதுவர். எனினும் விநாயகருக்கு வல்லபை என்னும் சக்தியை மனைவியாக நூல்கள் குறிப்பிடும். வல்லபையோடு கூடிய கணபதிக்கு வல்லப கணபதி என்பது பெயர். இவர் பத்துக் கைகள் உடையவராக விளங்குவார். இப் பத்துக் கைகளிலும் முறையே திருமகள், பார்வதி, இரதி, நிலமகள் ஆகியோருக்கு உரிய தாமரை, பாசம், உற்பலம், நெற்கதிர் ஆகியவைகளும்; திருமால் சிவபிரான், மன்மதன், வராகன் ஆகியோருக்கு முறையே உரிய சக்கரம், சூலம், வில், கதாயுதம் என்பனவற்றையும், ஒற்றைத் தந்தம் மாதுளம்பழம் ஆகியவற்றையும் ஏந்திக்கொண்டிருப்பர். இவ்வல்லப கணபதியை வழிபடுவோர் எல்லா வல்லமைகளையும் பெறுவர். நினைத்த செயல்களையெல்லாம் இனிதுநிறைவேற்றி முடிப்பர். வடலூர் வள்ளல் இராமலிங்க அடிகளார் 'வல்லப கணேசர்' 'சித்தி விநாயகர்' பற்றி புகழ்ந்து சிறந்த சில திருப்பதிகங்களைத் தமது திருவருட்பாவில் அருளிச் செய்துள்ளார்.

(18) ஞானத்தெய்வமாகியவிநாயகர், சித்தி புத்தி என்னும் இருமனைவியரை மணம்புரிந்து கொண்டு க்ஷேமம் இலாபம் என்னும் இரு புதல்வர்களைப் பெற்றெடுத்துள்ளனர், என்பர் பெரியோர். விநாயகரை வழிபடுபவர்களுக்கு நினைத்தது கைகூடும்; அறிவாற்றல் ஓங்கும்; இன்ப வாழ்வும் நற்பேறுகளும் ஏற்படும் என்பது இதன்கருத்து. எனவே இத்தகைய பல சிறப்புக்களையுடைய விநாயகப் பெருமானை நாம் அன்புடன் வணங்கினால், ''நமக்கு வாக்குண்டாம்; நல்ல மனமுண்டாம், மாமலராள் நோக்குண்டாம்; மேனி நுடங்காது''. ஆதலின் விநாயகரை நாம் அன்புடன் பணிந்து வழிபட்டு, நலம் பலவும் பெற்று உய்வோமாக!

# கருவூர்த் தேவர்

திரு. தி. ந. சிங்காரவேல் அவர்கள், பி.ஏ., பி.எல்.

**முன்னுரை :**

இராசராசசோழன், தமிழ்நாட்டில் அரசு செலுத்திய எண்ணற்ற பல அரசர்கள் எல்லோரிலும், தலைசிறந்த ஒரு பேரரசன் ஆவான். உலக வரலாற்றில் அவனுக்கு நிகரான சிறந்த பேரரசர்கள் ஒரு சிலர் மட்டுமே இருந்திருத்தல் இயலும் எனலாம். 'இனி யார் உளரோ? முன்னும் இல்லை!' என்னும் நிலையில் இராசராச சோழன், ஒப்புயர்வற்ற பேரரசனாகச் சிறந்து விளங்கினான். 'உலகத்திலேயே கோயில்கள் அமைக்கும் திறனில், ஈடும் எடுப்பும் அற்றுத் திகழ்பவர்கள் தமிழர்களே ஆவர்' என அயல்நாட்டு அறிஞர்களும் அகமகிழ்ந்து போற்றிப் பாராட்டும் நிலையில், தஞ்சைப் பெருவுடையார் (பிருகதீசுவரர்) கோயிலை எடுப்பித்த, இராசராச சோழனின் அருமை பெருமைகள் அளப்பரியன.

**கருவூர்த் தேவர் :**

இத்தகைய இணையற்ற பேரரசன் ஆகிய இராசராசசோழனின் பெருஞ் சிறப்புகளுக்குக் காரணர்களாக விளங்கியவர்களுள், இருவர் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர். ஒருவர் செம்பியன் மாதேவியார், மற்றொருவர் கருவூர்த்தேவர் எனலாம். செம்பியன் மாதேவியார், இராசராச சோழனை இளமையில் இனிது வளர்த்து, அவன் நற்குண நற்செயல்களைப் பெற்று விளங்குமாறு, அன்புடன் பழக்கிப் பயிற்சி அளித்தவர் ஆவர். கருவூர்த் தேவரோ, இராசராச் சோழனுக்கு அருளுரைகளும், அறிவுரைகளும் வழங்கி ஆசி அளித்து, அப் பேரரசனைச் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொண்டருளிய ஞானாசிரியப் பெருந்தகையார் ஆவர்.

**சிவபாதசேகரன் :**

அருள்மொழித்தேவன் என்னும் இயற்பெயர் கொண்டிருந்த இப்பேரரசன் தனது வீரத்தாலும், போர்த்திறத்தாலும் பகைவர்கள் பலரை அடக்கி, வெற்றிகள் பலபெற்று இராசராசசோழன் எனப் பலரும் பாராட்டும் வண்ணம், பெரும்புகழ் அடைந்து விளங்கி இருந்தான். அந்நிலையில் அவன் அகந்தையும் செருக்கும் அடையாமல், 'சிவபாதசேகரன்' என்னும் சிறப்பு அடையும்படி செய்தருளியவர், கருவூர்த் தேவரே என்றல் பொருந்தும்.

இராசராசன் இவரைத் தனது ஞானாசிரியராகவும், அரசியல் அறிவுரையாளராகவும் ஏற்றுப் போற்றி மதித்தொழுகி வந்தான் என்று தெரிகின்றது. தஞ்சைப் பெரிய கோயிலிற் கருவறையின் உட்புறச்சுவரில், கருவூர்த் தேவர் இராசராசனுக்கு ஏதோ அறிவுரை கூறுவது போலவும், அதனை அவன் பணிவன்புடன் கேட்பது போலவும், குரு சிஷ்யபாவ முறையில் வரையப்பெற்றிருக்கும் அழகோவியம், இதற்குச் சான்று பகரும்.

**திருவிசைப்பா :**

கருவூர்த் தேவர் அருளிய பாடல்கள், திருவிசைப்பா எனப்படும் ஒன்பதாம் திருமுறையிற் சேர்க்கப் பெற்றுள்ளன. சிதம்பரம் (கோயில்), திருக்களந்தை ஆதித்தேச்சுரம், திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், கங்கை கொண்ட சோளேச்சரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, தஞ்சை இராசராசேச்சரம், திருவிடைமருதூர் என்னும் பத்துத் தலங்களைக் கருவூர்த் தேவர் பாடியிருக்கின்றார்.

சிறந்த ஞானிகளாகவும் கவிஞர்களாகவும் விளங்கும் அருளாளர்களைத் தேவர்கள் என்று சிறப்பித்து வழங்குதல், அக்காலத்து மரபு போலும். கபிலதேவர், பரணதேவர், நக்கீர தேவர், கல்லாடதேவர், திருநாவுக்கரசுதேவர் எனப்பதினொன்றாம் திருமுறையில் நம்பியாண்டார் நம்பிகள் குறித்திருத்தல் காணலாம்.

**சீவன் முத்தர்கள் :**

*(1)* சீவன்முத்தராகவும், சித்தபுருடராகவும் சிறந்து திகழ்ந்திருந்த கருவூர்த்தேவர், தமது திருவிசைப்பாப் பாடல் ஒன்றில், சீவன்முத்தர்களின் சிறப்பியல்பினைத் திறம் தெரிந்து விளக்குகின்றார். ஞானிகள் நம்மைப் போலவே உலகில் இருந்து வருவார்களாயினும், உலக பந்த பாசங்களும், துன்பங்களும், அவர்களை ஒரு சிறிதும் தாக்குவதில்லை. நம்மையே அவர்கள் தாக்கி இடர்ப்படுத்துகின்றன. அஃது எதுபோல எனின், சூளையில் நெருப்பினாற் சுடப்பெறாத பச்சை மட்கலங்களை மழைநீர் கரைத்தொழிக்கும்; சூளையில் வைத்து நெருப்பினாற் சுடப்பெற்ற மட்கலங்களை அஃது ஒன்றும் செய்தல் இயலாது. அவைகள் அந்நீரைத் தம்மிடம் ஏற்று நிரப்பிக் கொண்டு நிற்கும். அதுபோல, இறைவனது திருவருள் ஒளியினாலும் தியானத்தினாலும் தூய்மை அடையப்பெற்ற ஞானத் தவ முனிவர்களை, இவ்வுலக பந்த பாசங்களும் துன்பங்களும் ஒன்றும் செய்யமாட்டா. இக் கருத்தினை,

''எழில்ஐஆழ் செய்கைப் பசுங்கலன் விசும்பின்
இன்துளி படநனைந்து உருகி
அழலை ஆழ்பு உருவப் புனலொடும் கிடந்தாங்கு,
ஆதனேன் மாதரார் கலவித்
தொழிலை ஆழ் நெஞ்சம் இடர்ப்பட வண்ணம்
தூங்கிருள் நடுநல் யாமத்து, ஓர்
மழலை யாழ் சிலம்ப வந்து, அகம் புகுந்தோன்
மருவிடம் திருவிடை மருதே''

எனவரும் இனிய திருவிசைப்பாவில், நம் கருவூர்த்தேவர் நன்கினிது எடுத்து விளக்கியருளிச் செய்திருத்தல், நாம் பெரிதும் கருதி மகிழ்தற்கு உரியது.

*(2)* கருவூர்த்தேவரின் 'அமுதுறழ் தீந்தமிழ் மாலை'யின் அரிய இனிய சுவைத்திறனுக்குப் பின்வரும் கருத்தமைந்த பாடல்களை எடுத்துக் காட்டலாம்; சாட்டியக்குடி என்னும் தலத்தில் ஏழ் இருக்கை என்னும் பெயர்கொண்ட கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு மாலை பாம்பு; உண்ணுகின்ற பாத்திரம் மண்டைஓடு; பட்டத்து யானை எருது; அன்பர்களின் கண்கள் பொழிகின்ற ஆனந்தக் கண்ணீரே திருமஞ்சனநீர்; மலைமகள் பட்டத்து மனைவி; பூசுகின்ற சாந்தம் திருநீறு; இனிய கீதம் வேதங்கள்; சடையே திருமுடி; அன்பர்களின் இதயமே கோயில்.

''பாந்தள் பூண்அரம்; பரிகலம் கபாலம்;
பட்டவர்த்தனம் எருது; அன்பர்
வார்ந்தகண் அருவி மஞ்சன சாலை ;
மலைமகள் மகிழ் பெருந் தேவி ;
சாந்தமும் திருநீறு; அருமறை கீதம் ;
சடை, முடி; சாட்டியக் குடியார்
ஏந்தெழில் இதயம், கோயில் மாளிகை ;
ஏழ் இருக்கையுள் இருந்த ஈசனுக்கே''

*(3)* சாட்டியக்குடி என்னும் தலத்தில், அக்கினி தேவனின் வடிவத்துடன் இரண்டு முகங்களும், மூன்று கால்களும், ஏழு கைகளும் உடையவராக எழுந்தருளி விளங்கும் சிவபெருமானுக்குச் சிறந்த புதல்வன் முருகன்! மனைவி பார்வதி; மருமகன் மன்மதன்; மருமகனின் தாய் திருமகள்; மாமன் இமயமலை அரசன்; தோழன் குபேரன்!

''திருமகன் முருகன்; தேவியேல் உமையாள்;
திருமகள் மருமகன் தாயாம்;
மருமகன் மதனன்; மாமனேல் இமவான்;
மலையுடை யரையர்தம் பாவை
தருமலி வளனாம் சிவபுரன் தோழன்,
தனபதி; சாட்டியக் குடியார்
இருமுகம் கழல்மூன்று ஏழுகைத் தலம்ஏழ்
இருக்கையில் இருந்த ஈசனுக்கே''

*(4)* நமது இந்து மதத்தைக் குறைகூறி இழித்துப் பழித்துரைக்கும் ஒருசிலர், ''இந்து மதம் உலகியற்கைக்கு ஏலாதது, மறுமைக்கே இயைந்தது'' (Unworldly and other worldly) என்று கூறுவது உண்டு. அவர்தம் கூற்றுப் பொருந்தாது, என்பது, ''மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்'', ''இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர்கெடலுமாம்'' என்பனபோல்வரும் சான்றோர் திருமொழிகளால் உணரப்படும். கருவூர்த்தேவர், சிவபெருமானை வணங்கினால் நாம் எல்லா நலங்களையும் பெறலாம் என்கின்றார். ''கங்கை கொண்ட சோழபுரத்தில் உள்ள சிவபெருமானை அன்புடன், திருவைந்தெழுத்து, ஓதி உள்ளம் உருகி வழிபட்டால், அவன் எட்டுத் திசைகளின் ஆட்சியையும், ஏராளமான பொன்னையும், நவமணிக் குவியல்களையும், பசும் பொன்மாளிகைகளையும், பவளவாயையுடைய அழகிய மகளிரின் இன்பநுகர்ச்சியையும், கற்பகச் சோலையையும், மற்றும் எல்லாவற்றையும் அளித்தருள்வான். இத்தகைய அற்புதத் தெய்வம் வேறு ஒன்று உளதோ?'' என அவர் வினவுகின்றார்.

''அற்புதத் தெய்வம் இதனின்மற் றுண்டே?
அன்பொடு தன்னை அஞ்செழுத்தின்
சொற்பதத் துள்வைத்து உள்ளம் அள்ளூறும்
தொண்டருக்கு எண்திசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவள வாயவர் பணை முலையும்
கற்பகப் பொழிலும் முழுதுமாம் கங்கை
கொண்ட சோளேச் சரத்தானே''

## எளிவரும் தன்மை :

எல்லையில்லாத புகழ்பெற்ற தஞ்சைப் பெரிய கோயிலை, இராசராச சோழர் உருவாக்குவதற்கு உறுதுணையாய் இருந்த கருவூர்த்தேவர், நம் வணக்கத்திற்கு உரியவர்! கருவூர்த் தேவரது அருள்வாழ்த்தின் ஆற்றலினால் இன்றும் தஞ்சைப் பெருவுடையார் கோவில் உலகப் புகழ் பெற்று விளங்குகிறது என்றால் அது மிகையாகாது. இராசராச சோழர் ஒரு சிறந்த சிவபக்தர் ஆகையால், தமக்கென்று ஒரு நினைவுச்சின்னம் ஏற்படுத்தாமல், பெரிய கோவிலையே தமது பக்தி நெறிப் பண்பாட்டிற்குரிய நினைவுச் சின்னமாக ஆக்கியுள்ளார். இப்பெரும் சமயப் பணியையும், கலைப்பணியையும் உலகுக்கு அளித்த இராசராச சோழரின் பிறந்தநாள் விழாவைப் பெரும் அளவில் துவக்கி வைக்கும்படியான வாய்ப்பு, இச் சிறியேனுக்குத் தஞ்சை அறநிலையத் துறையின் துணை ஆணையாளராக இருக்கும்போது கிட்டியது. ஆன்றோர் பலர் இருக்க, இராசராசரின் சிலையை உருவாக்கும் பணியும், சதயவிழாப் பணியும், சிறியேனுக்குக் கிடைத்தது, பெருவுடையாரின் திருவருளே யாகும். அத்திருவருளை நினைக்குங்கால்,

''பன்நெடுங் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பலர் ஏம்பலித் திருக்க,
என்நெடுங் கோயில் நெஞ்சுவீற் றிருந்த
எளிமையை என்றும்யான் மறக்கேன்;
மின்நெடும் புருவத்து இளமயில் அனையார்
விலங்கல்செய் நாடக சாலை,
இன்நடம் பயிலும் இஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே''

என்று கருவூர்த்தேவர் அருளிச் செய்த, இனிய திருப்பாடலே சிறியேனின் நினைவுக்கு வருகின்றது.

## முடிவுரை :

இங்ஙனம் இனிய பற்பல கருத்துக்கள் அமைந்த பாடல்கள் பல, கருவூர்த்தேவரின் திருவிசைப்பாவில் அடங்கியுள்ளன. அவைகளை அன்புடன் ஓதி, இராசராச சோழனும் இராசேந்திரச் சோழனும் போல, நாமும் கருவூர்த் தேவரின் திருவருளைப் பெற்று உய்ய முயலுவோமாக!

# இயற்கையும் இறைவனும்

''சித்தாந்தக் கலைச் செல்வர்''
திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A., L.T., மதுரை.

இயற்கை என்பது உயிர்கள் உடம்போடு கூடித் தோன்றி வளர்வதற்கும், பின் அவ்வுடம்பு தேய்ந்துகெட அதனினின்று பிரிவதற்கும் இடமாகவும், சூழ்நிலைச் சார்பாகவும் உள்ள உலகும், உலகத்துப் பொருள்களும் ஆகும். இவை பருவ மாறுதலும் வெப்ப தட்ப மாறுதலும் உடையனவாய், தோற்றம் நிலை மறைவு என்னும் முத்தொழிற்பட்டு இயன்று வருதலின், இயற்கை எனப்படுகின்றன.

ஊன்றி நோக்கும்போது இயற்கை என்பது அறிவுடைப் பொருளும் அறிவில் பொருளும் என இருவகைப்பட நிற்றல் புலனாகும். அறிவில் பொருள்கள் தமக்கு உள்ள இயங்குநிலை இயங்காநிலை என்னும் இரண்டிலும் தொடர்ந்து நிற்பதும், அத் தொடர்ச்சியில் மாறுதல் இருப்பின் அதற்குக் காரணமாக ஏதேனும் புதுத் தடை அல்லது ஆற்றலால் அம்மாறுதலை அடைவதுமாக உள்ளன என்பது விஞ்ஞானத்தின் துணிபு. அறிவுடைப் பொருள்கள் அங்ஙனம் அன்றித் தாமே துணியும் துணிவு உடையவையாய், அறிவில் பொருள்களைத் தமக்கு உதவியாயிருக்கும்படி மாற்ற வல்லனவாய் உள்ளன.

இவற்றுள் அறிவுடைப் பொருள்களாகிய உயிர்கள் எல்லாம், தமக்கு வரும் துன்பத்தின் நீங்கவும், இன்பத்தை வளர்த்துக் கொள்ளவும் நீடுதலாக வாழவும் விரும்புகின்றன, முயல்கின்றன. இவ் விருப்பத்திற்கும் முயற்சிக்கும் துணையாயிருந்து உதவும் உயிர்ப் பண்புகள் உணர்ச்சியும் பகுத்துணரும் மனஉணர்வும் எனக் கூறலாம். ஆயினும், இவ்வுணர்ச்சியும், பகுத்துணர்வும் இவற்றினால் நிகழும் முயற்சியும் குறித்த பயனை எப்பொழுதும் குறைவின்றித் தருகின்றன என்பது உறுதியன்று. இதனால் உயிர்களுக்குத் தாமே துணிந்து செயலாற்றும் திறன் இருப்பினும், அவை தம்வயம் உடையவை அல்ல என்பது விளங்குகின்றது.

இங்ஙனம் உயிர்கள் மாற்றம் பெரிதும் உள்ள உலகில் தம் வயம் இன்றி வேறு வேறு அறிவும் துணிவும் உடையனவாய் வாழ வேண்டுதலின், இவற்றைத் தன் ஆற்றலுள் அடங்கிக் கொண்டு ஆட்சிபுரியும் ஒரு பேரறிவுப் பொருள் தன்வயமும், இயற்கை முற்றுணர்வும் உடையதாய் உள்ளது எனவும், அஃது உடலின்கண் உள்ள உயிர்போலப் பல்வேறு அண்டங்களாய் அளவுட்படாது பரந்து விரிந்துள்ள இயற்கையாகிய உடலுக்கு உயிராய் உள்ளது எனவும் உயர்ந்தோர் தம் மெய்யுணர்வால் கண்டு கூறி வருகின்றனர்.

> ''உரைசேரும் எண்பத்து நான்குநூ
> றாயிரமாம் யோனி பேதம்
> நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய்
> அங்கங்கே நின்றான் கோயில்
> வரைசேரும் முகில்முழவ மயில்கள்பல
> நடமாட வண்டு பாட
> விரைசேர்பொன் இதழிதர மென்காந்தள்
> கையேற்கும் மிழலை யாமே''

என்பது திருஞானசம்பந்தர் வாய்மொழி.

இப்பாட்டில் ஆளுடைய பிள்ளையார் இயற்கையினையும், இறைவனையும் ஒன்றாக இணைத்து, உண்மையை நன்மை பெருகும்படி அழகுருவில் படைத்துத் தருகின்றார். உயிர்கள் அளவற்ற வேறுபாடு உடையன ஆயினும், அவை மக்கள் தேவர் விலங்கு பறவை முதலியனவாகவும், இவற்றின் உட்பிரிவாகவும் நிரல்பட நின்று தொழிற்படுகின்றன. இவற்றைப் படைத்தவன் ஒருவன் உளன்; அவன் இவற்றை நிரைசேரப் படைத்தமையால் முதல்வன் எனப்படுவன். அவன் உயிர்க்குயிராய் நின்று அவற்றை அறிவித்தும் செயல்படுத்தியும் வருதலின் இயவுள் எனக் குறிக்கவும் தக்கவன். மேலும் எவ்விடத்து எவ்வகைப் பொருட்கண்ணும் தங்கி நிற்றலின் அவன் இறைவன். இறு என்னும் பகுதி இறுத்தல், தங்குதல் என்னும் பொருளைத் தருவது.

அவன் எங்குத் தங்கி எப்பொருளையும் இயக்கி நிற்பினும், சிற்சில இடங்களில் தன் இருப்பு நன்கு விளங்கும்படி உயிர்களுக்கு அணுக்கமாக இருந்து அருள்புரிவன். இறைவன் கலை உருவினனாக, பேரறிவும் பேரின்பமுமே தன் வடிவாக உணரப்படுவோன். ஆதலால் விளங்கும் இடம் கலையரங்கமாகப் பேரின்பச் சூழலாக உள்ளது. இங்ஙனம் அவன் திருக்கோயில் கொண்டு, தன் அருள் விளங்கி வெளிப்பட உள்ள இடம் திருவீழிமிழலை. அங்கு மேகம் சோலைகளின் மேல்படிந்து முழவுபோல இன்னோசை காட்டி, பின் சொரியும் மழைக்கு அறிகுறியாக அதிர்கின்றது. காரைக் காணும்

மயில்கள் பலவும் தம் வண்ணத் தோகைகளை விரித்து நடமாடுகின்றன. வண்டுகள் பாடுகின்றன. உயர்ந்து வளர்ந்து சிவபெருமான் வடிவே என நிற்கும் கொன்றை மரம், தன் மலர்களாகிய பொற்காசுகளைச் சொரிகின்றது. பெண் மக்களின் கைவிரல்கள் போல் மலர்ந்துள்ள காந்தள் மலர்கள், அவற்றை ஏற்றுக் கொள்ளுகின்றன.

'தான் ஆடத் தன் தசை ஆடும்' என்பது மக்கள் வழங்கும் முதுமொழி. இது கூத்தப் பெருமானுக்கே மிகப் பொருத்தமானது. அவன் ஆனந்தக் கூத்தன். அவன் தசையே உடம்பே உலகு, அவன் 'பாரும் நீரொடு பல்கதிர் இரவியும் பனிமதி ஆகாசம் ஓரும் வாயுவும் ஒண்கனல் வேள்வியில் தலைவனுமாய் நின்றான்'. அவனை அகத்தே கொண்டார்க்கு ஆனந்தம் அன்றி வேறு நுகர்ச்சி ஏது?

மேலே காட்டிய சம்பந்தர் ஒண்தமிழ், இயற்கையினையும், இறைவனையும் இயற்கையோடு இறைவனுக்கு உள்ள பிரிப்பில் சம்பந்தத்தினையும், சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டித் தத்துவம் சமயம் கலை என்னும் மூன்றனையும் சேர்த்ததொரு மும்மணிகோவையாக உள்ளது. அஃது உணர்வும் இன்பமும் என்றும் பெருக்கும் அழிவில் பொருளாய்த் திகழ்தல் உணர்ந்து நுகர்ந்து இன்புறுதற்கு உரியது. அழகிய பொருள் என்றும் வற்றா இன்ப ஊற்று!

இயற்கையினையும் இறைவனையும், முடிந்த தத்துவநூல்கள் வழி நின்று தொடர்பு படுத்தி உணரும் உலகாகவும் உயிர்களாகவும் உருவுதிரிந்து (பரிணமித்து) காணப்படுகிறான் என்பர். வேறு சிலர், ஒருவன் அறிவு மயக்கத்தினால் கயிற்றை அரவாகக் காணுதல்போல, முதற்பொருளே தனக்குள் மயங்கித் தன்னை உலகாகவும் உயிராகவும் வேறுபடுத்திக் கண்டு வருகிறது என்பர். ஆயின் முதல்வனை இறைவன் என வழங்கிய பழந்தமிழ்ச் சான்றோர், இவ்விரண்டு கொள்கைகளுள் எதனையும் உடையர் அல்லர் என்பது அச்சொல்லியல் பால் விளங்குகிறது. உலகும் உயிர்களும் உள்பொருள்; முதல்வனும் உள்பொருள். உலகு மாற்றம் அடையும் அநித்தப்பொருள். உயிர்கள் உடம்பிற் பிரிந்து இறந்தும், அதனோடு கூடிப் பிறந்தும் வருவது; அறிவிக்க அறியும் செயற்கைச் சுட்டறிவு உடையது. முதல்வன் இயற்கை முற்றுணர்வுள்ள பேரின்பச் செம்பொருள். இயற்கை இறைவனுக்கு உடம்பு போல உள்ளது. அவன் அதற்கு உயிர்போல உளன் என்பதே உயர்ந்தோர் பலரும்கொண்ட முடிந்த உண்மை. இவ்வுண்மையை அழகாக விளக்கி உளங்கொளவைப்பது, திருஞானசம்பந்தரின் இந்தத் திருப்பாட்டு.



## கடவுள் நம்பிக்கை வேண்டும்!

''நாம் எல்லோரும் கடவுள் நம்பிக்கை உடையவர்களாக இருத்தல் வேண்டும்'' என்று நான் நினைக்கின்றேன். ஏனெனில், கடவுள் நம்பிக்கையானது, முடிவாக ஆராய்ந்து பார்க்கும்போது, இரண்டு செய்திகளில் நம்பிக்கை கொள்வதாக அமைகின்றது. அவையாவன: நாம் விரும்புகின்ற குறிக்கோள்கள் உண்மையாகவே உள்ளன என்பதும்; நீதி அமைதி உடன்பிறப்புமை இரக்கம் அருள் நேர்மை தூய்மை போன்ற உயரிய பண்புகளெல்லாம், சமுதாயம் வகுக்கின்ற வசதிக்குரிய வெறும் ஏற்பாடுகள் அல்ல. ஆனால் இவைகள் உண்மையிலேயே இந்தப் பேருலகத்தின் சிறந்த அடிப்படை அமைப்பைப் போன்று, அதனோடு ஒப்புமை உடையனவாய் விளங்குகின்றன என்பதும் ஆகும். கடவுளை நம்புவது என்பது, இந்த உயர்ந்த ஆன்மீகக் குறிக்கோள்களின் உண்மைத் தன்மையை நம்புவதேயாகும். இரண்டாவதாக, கடவுளை நம்புவதென்பது, இந்தக் குறிக்கோள்களெல்லாம் முடிவில் எப்படியும் வெற்றிபெற்றே தீரும் என்பதில் அசைவிலா உறுதிப்பாடுடைமையாம். அதாவது, எத்தகைய பெருந் தடைகள் ஏற்படினும், எத்தகைய ஊக்கக்குறைப்புகள் எதிர்ப்படினும், ஒரு பொருட்டன்று; நாம் ஒருவரை யொருவர் ஊக்கப்படுத்திக்கொண்டு தொடர்ந்து முயன்று உழைத்தால், இந்தக் குறிக்கோள்கள் இறுதியாக உணர்தற்கும் அடைதற்கும் உரிய இயல்பினவே யாகும் என்பது திண்ணம்''

—தமிழாக்கம்,

**ந. ரா. முருகவேள்**

"Belief in God I think we must all have, because belief in God, in the final analysis, means believing in two things-believing that the ideals we cherish are real, that such things as justice and peace and brotherhood and mercy and compassion and honesty are not merely convenient arrangements which society somehow works out, but that these actually correspond to the very structure of the universe. This is the way the universe was put together. To believe in God means to believe in the reality of these spiritual ideals. To believe in God means, secondly, to have faith that these ideals can win out in the end. It means believing that no matter what obstacles, no matter what discoruragements we may face, eventually, these ideals are bound to be realised, if we work and continue to inspire one another".

**—Dr. Albert Einstein,**
*My Philosophy of Judaism*

சிதம்பரம்

# சிவகாமியம்மை திருக்கோயில்

பேராசிரியர் திரு. வெள்ளை வாரணர்,
தமிழ்த்துறைத் தலைவர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்

சிவநெறிச்செல்வர்களால் பூலோக கயிலாயம் எனவும், கோயில் எனவும் போற்றப் பெறுவது பெரும்பற்றப்புலியூர் என்னும் சிதம்பரமாகும். இத்தலம் உலக புருடனுக்கு நெஞ்சத்தாமரையாக விளங்குவது. இதன்கண் ஞானமாகிய நுண்ணிய ஆகாயமாகிய திருச்சிற்றம்பலத்திலே சிவபெருமான் ஆனந்தத் திருக்கூத்தினை எக்காலத்திலும் நிகழ்த்தியருளுகின்றனர்.

இமயம் முதல் குமரி வரையுள்ள இந்தியப் பெருநிலத்திலும் கடல் கடந்து, இலங்கையிலும் உலகின் பல்வேறிடங்களிலும் வாழும் எல்லா மக்களையும், தன்பால் ஈர்க்கவல்ல தெய்வத் தன்மை வாய்ந்த திருத்தலங்களுள் தலைமை வாய்ந்தது சிதம்பரம். அழியுந் தன்மையனவாகிய உலகப்பற்றுகளை அறவே அகற்றி எவ்வகைப் பொருள்களுக்கும் சார்பாகிய இறைவன் திருவடிகளைப்பற்றி வழிபட்டு மகிழ்வதனையே பெரும் பற்றாகக் கொண்டவர் புலிக்கால் முனிவர். வியாக்கிரபாதராகிய அவர், உலக உயிர்கள் நலம் பெறுதல் வேண்டித் தில்லைவனமாக இருந்த இத்தலத்தில் திருமூலநாதராகிய சிவலிங்கத் திருவுருவினைப் பூசித்துப் போற்றினார். அதனால் இத்தலம் பெரும்பற்றப்புலியூர் என வழங்கப் பெறுவதாயிற்று. இத்தில்லையில் சிவபெருமான் பதஞ்சலி முனிவர் செய்த வழிபாட்டிற்குத் திருவுளம் மகிழ்ந்து அம்முனிவர் வேண்டியவண்ணம் நடராசப் பெருமானாக வெளிப்பட்டு அருளி உலகமீன்ற அன்னையாகிய சிவகாமி அம்மை காண ஆனந்தத் தாண்டவமாகிய அருட்கூத்தினை இடைவிடாது இயற்றி அருள்கின்றான் என அருள் நூல்கள் கூறுகின்றன.

முற்காலத்தில் சிம்மவர்மன் என்னும் வேந்தன் தில்லையை அடைந்து, வியாக்கிரபாதரை இறைஞ்சிச் சிவகங்கையில் நீராடித் தனது உடல் நோய் நீங்கிப் பொன்மேனி பெற்றமையால் இரணியவர்மன் என்னும் சிறப்புப் பெயர் பெற்று, நடராசப் பெருமானுக்கு நாள் வழிபாடும் திருவிழாக்களும் நிகழ நிபந்தம் வழங்கினான். இச்செய்தி கோயிற் புராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

திருமந்திர மாலையினை அருளிய சிவயோகியாகிய திருமூலர் முதல், அருள்மொழித் தேவராகிய சேக்கிழார்நாயனார் ஈறாகவுள்ள சைவத் திருமுறை ஆசிரியர் அனைவரும், தில்லைச் சிதம்பரத்தில் (சிற்றம்பலத்தில்) திருக்கூத்தியற்றியருளும் இறைவனது திருநடனத்தை இறைஞ்சிப் போற்றியுள்ளார்கள். கோச்செங்கட்சோழன் முதலிய சோழமன்னர்கள் அனைவரும் தில்லையம்பலவாணரைத் தமது குலதெய்வமாக வழிபட்டுத் தில்லைக் கோயிலுக்குப் பல திருப்பணிகள் செய்துள்ளார்கள். சோழ மன்னர்களும் அவர்தம் அரசியல் அதிகாரிகளும், தில்லைக் கோயிலுக்குச் செய்த திருப்பணிகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாகும்.

கி.பி. 5ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த பல்லவ வேந்தன் சிம்மவர்மன் என்பான் கூத்தப் பெருமானை வழிபட்டுத் தில்லையில் பொன் வேய்ந்தனன் என்பர். திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரும் இங்குக் கூத்தப் பெருமானை இறைஞ்சிப் போற்றிய காலத்தில் இத்திருக்கோயில் தூய செம் பொன்னினால் எழுதி வேய்ந்த சிற்றம்பலமாக விளங்கியுள்ளது என்பது, அவர்கள் பாடிய திருப்பதிகங்களால் நன்கு விளங்கும். வரகுணபாண்டியன் தில்லையைவழிபட்ட செய்தியை மணிவாசகர் குறித்துள்ளார். கி.பி. 9-ஆம் நூற் றாண்டின் இறுதியில் ஆட்சிபுரிந்த முதல் ஆதித்த சோழன், கொங்கு நாட்டினை வென்று அங்குப் பெற்ற பொன்னைக் கொண்டு தில்லையம்பலத்தை மீளவும் பொன்வேய்ந்தனன் என நம்பியாண்டார் நம்பி குறித்துள்ளார்.

முதற் குலோத்துங்கனது 44-ஆம் ஆட்சியாண்டில் இராசராசன் குந்தவையார், தில்லை நாயகர்தம் கோயிலெல்லாம் செம்பொன்வேய்ந்துள்ளார். மூன்றாங் குலோத்துங்க சோழன் நடராசப் பெருமான் திருநடம் புரியும் திருச்சிற்றம்பலத்தின் முகப்பிலுள்ள முன் மண்டபமாகிய எதிரம்பலத்தைச் செம்பொன் வேய்ந்தான். சிவகாமியம்மையின் திருக்கோபுரத்திற்குச் செம்பொன் வேய்ந்தான். இச்செய்தி,

> ''எத்தரையும் தொழும் இறைவற்கு
> எதிரம்பலஞ் செம்பொன் வேய்ந்து,
> சித்திரை விழா அமைத்து, இறைவி
> திருக்கோபுரஞ் செம்பொன்
> வேய்ந்து''

எனவரும் அவனது மெய்க்கீர்த்தியிற் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறே பாண்டியர், பல்லவர் முதலிய பேரரசர்களும், பிற குறுநில மன்னர்களும், அன்பிற் சிறந்த அடியார்களும் தில்லையில் நடராசப்பெருமான் திருக்கோயிலிற் காலந் தோறும் புதிய புதிய திருப்பணிகளைச் செய்து நாள் வழிபாட்டிற்கும், திருவிழாக்களுக்கும், நந்தவனம் அமைத்தல் முதலிய திருப்பணி களுக்கும் வேண்டிய நிபந்தங்களை நிலமாக வும், பொருளாகவும் வழங்கியுள்ளமை, இத் திருக்கோயிலில் வரையப்பெற்றுள்ள 270-க்கு மேற்பட்ட கல்வெட்டுக்களால் இனிது விளங் கும்.

கி.பி. 1239 முதல் 1251 வரை ஆட்சிபுரிந்த இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் தில்லையிற் கூத்தப்பெருமானை வணங்கித் துலாபார தானஞ் செய்ததுடன், தில்லைச் சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்தும் மேலைக் கோபுரம் கட்டியும் திருப்பணி புரிந்துள்ளான். பல்லவ மரபினனாகிய கோப்பெருங்சிங்கன் என்பான், சொக்கசீயன் என்ற பெயரால் தில் லையில் தெற்குக் கோபுரத்தைக் கட்டியதுடன் ஆண்டுதோறும் அதனைச் சீர்திருத்தற்கு வேண் டும் செலவுக்காகச் செங்கற்பட்டு மாவட்டத் திலுள்ள ஆற்றூர் என்ற ஊரை நிபந்தமாக வழங்கியுள்ளான். விசயநகர வேந்தர் கிருஷ்ண தேவராயர் பொட்டனூரில் வெற்றித்தூண் நாட்டித் தில்லையிற் பொன்னம்பல நடராசரைச் சேவித்துச் சிதம்பரம் வடக்குக் கோபுரத்தைக் கட்டியுள்ளார்.



இவ்வாறு தமிழ் வேந்தர்களாலும் குறுநில மன்னர்களாலும் படைத் தலைவர்களாலும் நாட்டு மக்களாலும் பல்வகைத் திருப்பணி களைப் புரிந்து போற்றப் பெற்றுவரும் தில்லை பெருங்கோயிலில் நடு நாயகமாகத் திகழ்வது, நடராசப்பெருமான் ஆனந்தத் திருக்கூத்தி யற்றும் பொன்னம்பலமாகிய திருச்சிற்றம்பலத் திருக்கோயிலாகும். இதனைச் சூழ்த் திரு மூலட்டானம் முதலாகப் பல திருக்கோயில்கள் அமைந்துள்ளன. அவற்றுள் மூன்றாம் திருச் சுற்றில் சிவகங்கைத் தீர்த்தத்தின் மேல் கரை யில் அமைந்துள்ள சிவகாமியம்மை திருக் கோயில் மிகவும் சிறப்புடையதாகும். இத் திருக்கோயிலில் எழுந்தருளிய சிவகாமியம்மை யைத் "திருக் காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார்" எனக் கல்வெட்டுக்கள் போற்று கின்றன.

நடராசப்பெருமான் நிகழ்த்தியருளும் திருக் கூத்தினை உள்ளவாறு கண்டு மகிழும் மெய் யுணர்வு வாய்க்கப்பெறாத நம்மனோர் பொருட்டு அம் முதல்வனை விட்டுப் பிரிவி லாத திருவருளின் வடிவாகிய சிவகாமியம்மை யார் அப்பெருமானது ஆனந்தக் கூத்தினை உடனிருந்து கண்டு அதன் பயனை உலக உயிர் களுக்கு அளித்தருளுகின்றார் என அருள் நூல் கள் கூறுகின்றன. தாய்ப் பாலையே உணவாகக் கொண்டு வளரும் கைக்குழந்தைக்கு நோய் வந் தால் அந் நோயினைத் தீர்க்கும் மருந்தினைப் பிள்ளைக்குக் கொடுப்பதில்லை. மருந்தின் வேகத்தைக் குழந்தையின் மென்மையான குடர் தாங்காதென்று கருதிக் குழந்தையின் நோய் தீர்க்கும் மருந்தினைத் தானேயுட் கொண்டு, அதன் பயனைத் தாய்ப்பால் வழி யாகக் குழந்தைகள் பெற்று நோய் நீங்க உதவு வது, பால் நினைந்தூட்டும் தாயின் செய லாகும். அதுபோலவே உலக அன்னையாகிய சிவகாமியம்மையும் மன்னுயிர்த் தொகுதியா கிய நம்மனோரின் தீராத பிறவிநோய் நம்மை விட்டு நீங்குமாறு இறைவன் திருக்கூத்தினைத் தாம் இடைவிடாது கண்டு அதன் பயனை நமக்கு அளித்தருளுகின்றார் என்பது அரு ளாளர் கண்டுணர்ந்த அனுபவ உண்மையாகும். இறைவனது திருக்கூத்தின் பயனை உயிர்கள் பெற உதவும் அருளன்னையாகிய சிவகாமசுந் தரிக்கு, தில்லைப் பெருங்கோயிலில் சிவகங்கைத் தீர்த்தத்தின் மேல்கரையில் தனிக் கோயில் அமைந்து நாள் வழிபாடும், திருவிழாக்களும் நிகழ்த்தும் வழக்கம் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே நிலவி வந்தது.

கி.பி. 1118-1136 வரை ஆட்சி புரிந்த விக்கிரமசோழன் காலத்தில் சிவகாமியம்மை திருக்கோயில் கருங்கற்றளியாக அமைக்கப் பெற்றது. அவ் வேந்தனது படைத் தலைவன் மணவிற்கூத்தன் காலிங்கராயன் என்பான், சிவ காமியம்மை திருக்கோயிலைச் சூழ்ந்த திருச் சுற்றுத் திருமாளிகைப் பத்தியும் அமைத்து அம்மைக்கு அபிடேகத்திற்குரிய பாற்பசுவும், அம்மைக்குச் சாத்தப் பீதாம்பரமும் அளித் துள்ளான்.

சிவகாமியம்மை திருவிழா நாட்களில் திரு வோலக்கமாக எழுந்தருளியிருத்தற்கும் தேவார திருப்பதிகம் பாராயணம் செய்வதற்கும் ஏற்ற வாறு சிவகாமியம்மை திருக்கோயிலுக்குத்தென் புறத்தில் விக்கிரமசோழன் திருமண்டபம் என்ற பெயருடன் நூற்றுக்கால் மண்டபத்தை அமைத்துள்ளான். இவ்வாறு விக்கிரம சோழன் காலத்தில் தொடங்கப்பெற்று நிகழ்ந்த சிவ காமியம்மை திருக்கோயில் திருப்பணி, இவன் மகன் இரண்டாம் குலோத்துங்கன் ஆட்சியில் மிகச் சிறப்பாக நிறைவேறியது. தில்லையில் பேரம்பலத்தையும், உட்கோபுரத்தையும் திருச் சுற்று மாளிகையையும் அமைத்துத் தில்லைச் சிற்றம்பலத்தை மிகவும் விரிவுடையதாகச் செய்த இரண்டாம் குலோத்துங்க சோழன், உமாதேவியார் தாம் பிறந்த இமய வெற்பை யும் மறக்கும்படி சிவகாமியம்மை திருக்கோயி லை மிகப் பெரியதாக அமைத்தான். திருவிழா நாட்களில் சிவகாமியம்மை உலா வருதற்குப் பொன்னாலும் மணியாலும் புனையப்பெற்ற அழகிய தேரினைச் செய்தளித்தான். பொன் னாலாகிய கற்பக தருக்களை அமைத்தான். திருக்குளத்தைச் செம்மைப்படுத்தினான். கோயிலுக்குப் பசு நிரைகளும் களிற்றினங் களும் மிகுதியாக வழங்கினான் என்று, அவனது அவைக்களப் புலவர் ஒட்டக்கூத்தர் தம் நூல் களிற்குறித்துள்ளார். இவன் செய்த தில்லைத் திருப்பணிகளுள் சிவகாமியம்மை திருக்கோயிற் பணி மிகவும் சிறப்புடையதாதலின், அதுபற்றி இவ்விரண்டாங் குலோத்துங்கனை "ஸ்ரீபிடங் கண்ட பெரிய பெருமாள்" என மக்கள் பா ராட்டிப் போற்றுவாராயினர். இச் செய்தி,

'நீடிய வெண்டிசை நிழல் வாய்ப்ப
நீடிய தெக்கிண மேருவென்னப்
பீடிகை தில்லை வனத்த மைத்த
பெரிய பெருமாளை வாழ்த்தினவே'

எனவரும் தக்கயாகப் பரணியாலும், அதன் பழைய உரையாலும் இனிது விளங்கும்.

''ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன்'' என மணிவாசகப் பெருமான் அருளியவாறு கூத்தப்பெருமானது அருளினீர்மையதாய்த் திகழும் சிவகங்கைத் தீர்த்தத்தின் மேல்கரையில் அருள்வடிவாகிய சிவகாமி அம்மையின் திருக்கோயில், நம் முன்னோர்களது சிவபத்திக்கும், சோழ மன்னர்கள் காலத்துக் கட்டடக் கலைக்கும், சிற்பக் கலைக்கும் ஓவியக்கலைக்கும் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றது. இக்கோயிலின் திருச்சுற்றிலே இரண்டடுக்கு அறைகளை உடைய தாயமைந்த திருமாளிகைப் பத்தியும், அதன் கீழ்க் குறட்டிற்பரத நாட்டிய நுட்பங்களையும் அக்கால இசைக் கருவிகளையும் தெளிவாகப் புலப்படுத்தும் நிலையில் அமைக்கப்பெற்றுள்ள கருங்கற் சிற்பங்களும், பிறநாட்டுநுண்கலைஞர்களால் வியந்து பாராட்டும் முறையில் விளங்குகின்றன. சிவகாமியம்மை கோயிலின் உள்ளே முன்னர் அமைந்துள்ள முன் மண்டபமும், அதன் தென்பகுதியிலும் வடபகுதியிலுமாக மேலே எழுதப் பெற்றுள்ள பழங்கால ஓவியங்களும், ஓவியக் கலை வல்லுநர்களால்வியந்து போற்றத்தகுவனவாகும்.

சிதம்பரம் திருக்கோயிலிற் பொறிக்கப் பெற்றுள்ள கல்வெட்டுக்களில் இக்கோயிலுக்கு முன்னோர் செய்துள்ள அறக்கட்டளைகள் பல குறிக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் திருநந்தவனம் அமைத்தற்கும் அந் நந்தவன்ங்களிற்பணி புரிவோர்க்கு நிலம் கொடுத்தற்கும் என அளிக்கப்பெற்ற நிபந்தங்கள் விரிவாக இடம் பெற்றுள்ளன. கோப்பெருஞ் சிங்கனது ஆட்சியின் ஆறாவது ஆண்டில் திருக்காமக்கோட்டமுடைய பெரிய நாச்சியார்க்குச் சிறப்பாகச் சாத்தியருளத் திருப்பூ மண்டபத்துக்கு முதலாகத் திருநிலை அழகியாள் திருநந்தவனமும் நந்தவனப் பணி செய்வார்க்கு உணவளிக்கத் திருப்பாவாடைப் புறமும் ஆக நிலமளித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது. இவனது ஆட்சியின் ஏழாம் ஆண்டுக் கல்வெட்டில் சிதம்பரத்தின் எல்லையிலுள்ள கடவாச்சேரியிலும் சண்டேசுவரநல்லூரிலும் இளநாங்கூரிலும் சிவகாமசுந்தரி அம்மைக்குத் திருநந்தவனங்கள் அமைக்க நிலமளித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

எட்டாமாண்டுக் கல்வெட்டில் திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார்க்குச் சாத்தும் பரிசட்டம் (புடவை) நெய்து கொடுக்கும் சாலியர் குடியிருக்கத் திருவம்பலப் பெருமாள்புரம் என்னும் பெயரால் கடவாச்சேரியான தில்லைநாயகநல்லூரில் நாலுவேலியும் ஆறுமாவும் நிலமளித்த செய்தி குறிக்கப் பெற்றுள்ளது. ஒன்பதாம் ஆண்டுக் கல்வெட்டில் கொற்றங்குடியான பவித்திரமாணிக்க நல்லூர் முதலிய ஊர்களிலும் சிவகாமியம்மை திருநந்தவனத்திற்கும் நந்தவனக்குடிகட்கும் நிலமளித்தமை கூறப்பெற்றுள்ளது. இவ்வாறே இவ்வேந்தனது ஆட்சியின் 10-ஆம் ஆண்டிலும், 11-ஆம் ஆண்டிலும் வரையப்பெற்ற கல்வெட்டுக்களில் இக்கோயில் திருநந்தவனத்திற்கும் திருப்பள்ளித் தாமம் பறித்து மாலை தொடுப்பார்க்கும் எனச் சிதம்பரத்தையடுத்த விக்கிரம சோழநல்லூரிலும் அள்க்குடியிலும் எருக்காட்டுஞ்சேரியான ஜயங்கொண்ட சோழ நல்லூரிலும் திருநந்தவனப் புறமாகவும் திருப்பாவாடைப் புறமாகவும் நிலமளித்த செய்திகள் இடம் பெற்றுள்ளன.

இதுகாறும் எடுத்துக்காட்டிய வரலாற்றுக் குறிப்புக்களால் தில்லையில்திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியாரான சிவகாமியம்மையார்க்குச் சிறந்த முறையில் திருப்பணிகளும்பூசைனைகளும்திருவிழாக்களும்வேந்தர்களாலும் நாட்டு மக்களாலும் நிகழ்த்தப் பெற்று வந்தமையும், அம்மை திருக்கோயிலின் கலைநலமும் இனிது புலனாதல் காணலாம்.

---

## உமை-முருகு-இறைவர்

சிவபெருமான் உயிர்களின் கருமேனி கழிப்பதன் பொருட்டுக் கொண்டருளிய திருமேனிகள் பலவற்றுள், ''உமை முருகு இறைவர்'' என்பது ஒன்று. சிவபெருமான் ஸ்கந்தமூர்த்தி எனப்படும் முருகனைத்தமக்கும் உமாதேவியாருக்கும் நடுவே இருக்கச் செய்து எழுந்தருளியிருக்கும் திருவுருவமே ''சோமாஸ்கந்தமூர்த்தம்' (ஸ-உமா-ஸ்கந்த) அல்லது ''உமை-முருகு-இறைவர்'' திருவுருவம் எனப்படும்.

சோமாஸ்கந்தமூர்த்தம், தமிழ்நாட்டுக்கே தனிப்பெருஞ் சிறப்பாக உரியது. இந்திய நாட்டின் வேறு பிற எந்தப் பகுதியிலும் காணப்படாமல், தமிழ்நாட்டில் மட்டுமே தனிப்பெருஞ் சிறப்பாகச் சோமாஸ்கந்தர் திருவுருவச் சிற்பங்கள் காணப்படுகின்றன. சமண பௌத்த சமயங்களின் விளைவாகத் துறவறமே சால்புடைத்தென்னும் கொள்கை பெரிதும் பரவி வந்தகாலையில், மக்கட் சமுதாயம் வளர்ந்தோங்கி நிலைபெறுதற் பொருட்டுக் குடும்ப வாழ்வின் நலங்களையும், இல்லறமே நல்லறமாதலையும், வலியுறுத்தித் தெளிவுறுத்துதல், பக்தி இயக்கத்தைப் பரப்பி நாட்டு மக்கள்பால் மறுமலர்ச்சியுணர்வு கிளர்ந்தெழச் செய்தருளிய சமயாசிரியர்களுக்குச் சிறந்ததொரு பெருங் கடமையாயிற்று. அவ்வகையிற் குடும்ப வாழ்வின் அளப்பரு நலங்களையும், அரும்பெரும் சிறப்பினையும் விளக்குவதற்காகப் போற்றிப் பரப்பப்பெற்ற திருவுருவமே, சோமாஸ்கந்த மூர்த்தமாகும்.

பல்லவப் பேரரசர்கள் அமைத்த சிற்பங்களில், சோமாஸ்கந்தர் திருவுருவம் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றது. மாமல்லபுரம், திருக்கழுக்குன்றம், காஞ்சிபுரம் (கயிலாசநாதர், ஏகாம்பரநாதர்), திருமறைக்காடு, திருப்புள்ளிருக்கு வேளூர் முதலிய பற்பல இடங்களில் அமைந்துள்ள திருக்கோயில்களில் எல்லாம், சிவலிங்கத்திற்குப் பின்புறமுள்ள கருவறைச் சுவரில், இத்திருவுருவம் அமையப்பெற்றிருத்தல் காணலாம். இத்திருவுருவை அன்புடன் வழிபடுவோர் அனைவரும், கணவனும் மனைவியுமாய் இல்லற நெறி நின்று இணையிலா இன்பம் துய்த்து, நல்ல மகப்பேறும் குலவளர்ச்சியும் பெற்று, இம்மையிற் சிறந்து வாழ்வதுடன், வீடுபேறும் அடைவார்கள்.

—ஆசிரியர்

# சங்க காலத்தில் சிவநெறி

பேராசிரியர் திரு. அ. மு. பரமசிவானந்தம், M.A.,M.Litt. அவர்கள்

(முற்றொடர்ச்சி)

உமை அம்மையார் சங்க இலக்கியங்களிலே சிவனோடு சார்த்தியே பேசப்படுகின்றார். அன்றித் தனியாகக் காணும்போது காடுறை தெய்வமாகத் துர்க்கையாகக் காட்டப்பெறுகின்றார். 'கானமர் செல்வி அருளலின்' (அகம் 345) என அக்கொற்றவையின் அருள்நலம் பாராட்டப் பெறுகின்றது. 'ஒரு குழை ஒருவன்' (கலி. 26) எனவும், 'ஈர்ஞ்சடை அந்தணன் உமை அமர்ந்துயர்மலை இருந்தனன்' (கலி. 31) எனவும், அம்மை இறைவனோடு சேர்த்தே பேசப் பெறுவதையும் காண முடிகின்றது. சிவ வழிபாடே அன்றிச் சத்தியாகிய அம்மை வழிபாடும் அச்சங்க காலத்தில் இருந்தது என்பதும், அவ்வழிபாடு தனித்த முறையிலும் சிவனொடு சேர்த்தும் ஆற்றப் பெற்றது என்பதும் நன்கு தெரிகிறது. இச் சக்தி வழிபாடு சங்க காலத்தை அடுத்து எழுந்த சிலப்பதிகாரத்தில் நன்கு போற்றப்படுகிறது. 'கானமர் செல்வி அருளல்' என்ற அகநானூற்றுக்கு விளக்கமாக வேட்டுவ வரியே அமைந்துள்ளது.

> ''சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்திச்
> செங்கண் அரிமான் சினவிடைமேல் நின்றாயால்
> கங்கைமுடிக் கணிந்த கண்ணுதலோன் பாகத்து
> மங்கை உருவாய் மறைஏத்த வேநிற்பாய்''

என்று அச்சக்தியாகிய கொற்றவையை முன்னிறுத்திப்பாடி, அவளாடும் கூத்துட்படும் நிலையை இளங்கோவடிகள் விளக்கிக் காட்டியுள்ளார். இவ்வாறு போற்றப்படும் அம்மையின் மகனே முருகன் என்பதைத்தான் நக்கீரர் 'மால்வரை மலைமகள் மகனே' (256-57) என்றும் 'வெற்றிவேல் போர்க் கொற்றவை சிறுவ' (258) என்றும், 'இழையணி சிறப்பிற் பழையோள் குழவி' (259) என்றும் பாராட்டுகின்றார். அவர் வாக்கின்வழி உமையம்மையார் இமவான் மகளாகிய வரலாறும், கொற்றவையார்கிச் சிறந்த பெருமையும் பிறவும் நன்கு விளங்குகின்றனவன்றோ!

**சங்க நூல்களில் சிவன் :**

இனிச் சிவபெருமான்பற்றிச் சங்ககாலத்தில் வந்த இடங்களைக் காணலாம். சிவபெருமானுக்கு உகந்தநாள் திருவாதிரை. இம் மார்கழித் திங்களில் வரும் ஆதிரை நிறைமதி கூடிய நன்னாள் சிவனாரின் திருநாளாகக் கொண்டாடப் பெறுகின்றது. 'அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்' எனப் பாடுகின்றார் அப்பர். அந்த நாள் சிவனுடைய நாள் என்பதை, 'அரும்பெறல் ஆதிரையான்' (கலி. 150-70) என்று கலித்தொகை காட்டுகின்றது. இதே கலி சிவனைக் 'கொன்றை அலங்கல் அம் தெரியலான்' எனவும், 'பிறங்கு நீர் சடைக் கரந்தான்' எனவும், 'ஏற்று ஊர்தியான்' எனவும், 'புதுத்திங்கட் கண்ணியான்' எனவும் பாராட்டுகின்றது. இவ்வாறு சிவபிரானுக்கு இன்று நாம் அமைக்கின்ற அத்தனைச் சிறப்புக்களும் சங்ககாலத்திலேயே சிறந்திருந்தன என்பதை வெளிப்படையாக நன்கு அறியலாம். இன்னும் அச் சிவனார் பற்றிய பல வரலாறுகளும் சங்ககால இலக்கியங்களில் நன்கு பேசப்பெறுகின்றன.



**இராவணன் கயிலையைப் பெயர்த்தமை :**

இராவணனைப் பற்றிய வரலாறு நாடு அறிந்த ஒன்று. நாற்புறமும் சுற்றி வெற்றி மாலை சூடிவந்த இராவணன் இமயமலைப் பக்கம்வர, அது தடுத்ததாகவும், அதை அப்படியே பெயர்க்க நினைத்தான். மலை ஆட உமை அஞ்சி நிற்க, சிவன் தன்விரலால் அழுத்த இராவணன் அம்மலையின்கீழ் நெடுநாள் துன்பம் உழந்தான். பின் நாரதர் காட்ட அருள்நிலை பெற்றுச் சாமவேதம் பாடிப் பிழைத்தான். இக்கதை நாடறிந்த ஒன்று. இதையும் மற்றொன்றையும்சேர்த்துக்கலித்தொகைப்பாட்டு ஒன்று அழகுற நமக்குக் காட்டுகின்றது. இராவணன் வரலாறு மட்டுமின்றிச் சிவன் இமயத்தை மேருவைவில்லாகவாங்கிவளைத்த வரலாறும் அப்பாட்டில் குறிப்பிடப் பெறுகின்றது.

**முப்புர எரிப்பு :**

மேருவை வளைத்த வரலாறு ஈண்டுக் குறிப்பாகக் காட்டப்பெறினும் மற்றொரு சங்கப்பாடலில் நன்கு விளக்கமாக எடுத்துக் காட்டப் பெறுகின்றது. திரிபுரங்களை வென்ற வரலாறே மலையை வில்லாக வளைத்த வரலாறு. அதற்கு ஒரு பெரு மலையே வில்லாக வளைந்தது. பெரும் பாம்பே நாணாக நின்றது. அவ்வில்லிடை நாணேற்றி ஒரம்பு விட்டு மூன்று புரங்களை எரித்தான் சிவபெருமான் என்பதை மதுரை மருதன் இளநாகனார் நன்கு காட்டுகின்றார். இதில் மூவெயில் உடற்றிய வரலாறு மட்டுமன்றிச் சிவனைக் கறைமிடற்று அண்ண

லாகவும், பிறை அணிந்தவனாகவும், நுதல் விழி நாட்டத்து இறையோனாகவும் காணும் வரலாறுகளும் அமைந்துள்ளன. மற்றும் இச் சிவன் மூவெயிலை உடற்றிய காரணத்தையும் அவனுடைய கணிச்சிப் படையையும் கலித் தொகை காட்டுகின்றது.

பாலைக் கலியில் அவனது எயில்வென்ற முக்கண் சிறப்பும் பிறவும் பேசப்படுகின்றன. இவையே அன்றிச் சிவனைப் பற்றிய வேறு சில குறிப்புக்களும் சங்ககால இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று அவன் 'ஆலமர் செல்வனாக' அமர்ந்த சிறப்பாகும்.

**ஆலமுற்றம் :**

கல்லாலின் புடை அமர்ந்து வல்லார்க்கு அறமுரைத்த பெருந்திறல் பிற்காலச் சமய இலக்கியங்களிலெல்லாம் நன்கு பேசப்படுகின்றது. சங்க இலக்கியங்கள் சிவனுக்கு உரிய பல்வேறு சிறப்புக்களோடு இவ் ஆலமுற்றத்தைக் குறிப்பிடுகின்றன. ஆலமுற்றம் சிவனுக்கே உரியதென்பதை,

''ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆலமுற்றம் கவின்பெறத் தைஇய
பொய்கை சூழ்ந்த பொழின்மனை மகளிர்''
(அகம் 181)

என அகநானூறு ஆலமுற்றத்தை அவனுக்கே உரியதாகக் காட்டுகின்றது. இதையே,

''ஆலமர் கடவுள் அன்னநின் செல்வம்
வேல்கெழு குரிசில் கண்டேன் ஆகலின்'' (புற. 198)

என்று வடம வண்ணக்கன் பேரி சாத்தனாரும்,

''நீலநாகம் நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த ஆஅய்'
(சிறுபாண். 96-99)

என்று நல்லூர் நத்தத்தனாரும் பாடியிருப்பதைக் காணலாம்.

**சூலம்-கொடி முதலியன :**

இவ்வாறு ஆலமர் செல்வனாய் அறமுரைத்த அண்ணலாய் அம்மையப்பராய் விளங்கிய சிவன், சூலம் பிடித்த சுடர்ப்படை உடையவனாக உள்ளான் என்பதை, ''சூலம் பிடித்த சுடர்ப்படைக் காலக்கடவுள்'' (பதிற்). என்ற பதிற்றுப்பத்து அடி காட்டுகின்றது. இச் சிவபெருமான் உமையோர் பாகத்தன் ஆகி உள்ளமையின் ஒரு குழை அணிந்தவன் எனக் காட்டப்பெறுகின்றான். அத்துடன் அவனுக்கு ஏறு வாகனமாக இருப்பதோடு கொடியாகவும் இருக்கின்றது. இரண்டையும் பிணித்த பெருங் கடுங்கோ ''ஒருகுழை ஒருவன் போல்'' எனவும் ''ஆனேற்றுக் கொடியோன் போல்'' எனவும் தனது பாலைக்கலியுள்(26) பொருள்பொதிந்து காட்டுகின்றார். இன்னும் கடவுள் வாழ்த்துப் பாடல்களுள் இவ்வுண்மைகள் பேசப் பெறுகின்றன. அவை காலத்தால் பிந்தியது என்பவாகலின் அவற்றை விட்டு மேலே செல்வோம்.

இச் சிவபெருமான் சடையுள் கங்கையைக் கரந்த வரலாறு சங்க இலக்கியத்தில் காண முடியும். அக் கங்கை இமயத்து உச்சியிலிருந்து இமையவர் வாழும் அப்பெருமலை உச்சியிலிருந்து கிழக்கிறங்கிப் பொன்கிழித்து ஓடி வரும் பேராறு என்பதையும் அன்றே காட்டியுள்ளனர் புலவர். ''பிறங்கு நீர் சடைக்கரந்தான்'' (கலி. 150).

என்று சிவன் கங்கையைக் கரந்த வரலாறு கூறப்பெற்றுள்ளது. அக் கங்கை இழிதரும் சிறப்பினை,

''இமையவர் உறையும் சிமையச் செவ்வரை
வெண்திரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்பொழித்து இழிதரும் போக்கருங் கங்கைப்
பெருநீர்''

என்ற பத்துப்பாட்டு அடிகள் காட்டுகின்றன.

**சிவனே தலைவன் :**

இவ்வாறு, வேண்டுவார்க்கு வேண்டிய வகையிலே வடிவு காட்டி ஆலமர் செல்வனாய்-கறைமிடற் றண்ணலாய்-முக்கண் முதல்வனாய் பிறைசூடிய பெம்மானாய் விளங்கி அணுவுக்கு அணுவாய் நின்ற அதே சிவன், அப்பாலுக் கப்பாலாய் நின்று பஞ்ச பூதங்களையும் தோற்றுவித்து இயக்கும் ஒப்பிலி அப்பனாகவும் விளங்குகின்றான். அடியவர்கள் பொருட்டு அவன் விரும்பிய வண்ணம் காட்சி வழங்கும் அதே ஆண்டவன் கல்லாதார் மனத்தணுகாக் கடவுளாக நிற்பதோடு, கற்றவரும் எளிமையில் காண முடியாது அப்பாலுக்கப்பால் நிற்கின்றான் என்பதை எச்சமய நூலோரும் உற்று உணர்ந்து ஓதி வைத்துள்ளார்கள். மற்றும் அம் முழுமுதற் பொருள் உலகம் அனைத்தும் தோன்றுவதற்கு முதற் காரணமாய் ஐம் பெரும் பூதங்களை ஆக்கி அவற்றுடன் தானும் கலந்து அலகிலா விளையாடலைப் புரிகின்றான் எனக் காட்டுவர். இவற்றையெல்லாம் தொகுத்து,

''நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்பொடு ஐந்துஉடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக'' (மதுரை.
453—55)

என்று மாங்குடி மருதனார் மழுவைத் தாங்கிய சிவனுடைய முடிவிலாற்றல் உடைமையை நன்கு காட்டுவது அறியற்பாலதாகும்.

**கடவுள் வழிபாடு :**

இவ்வாறு யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்கும் கடவுளை, உள்குவார் உள்ளத்து உள்கும் வடிவாய்த் தோன்றி வரமளிக்கும் ஆண்டவனை, அடியவர்கள் ஒருங்குகூடிப் பலவிடங்களில் தொழுது வந்தனர். கடவுள் வழிபாட்டிற்கெனத் தனித்த இடங்கள் அமைக்கப் பெற்றிருந்தன. அவை இயற்கைச் சூழல் களோடு அமைந்து இருந்தன. மக்கள் அவ்

விடம் காலமறிந்து கூடிப் பாடிப் பரவிப் போற்றிப் புகழ்ந்து வாழ்த்திச் சென்றார்கள் என்று உருத்திரங்கண்ணனார் நன்கு எடுத்துக் காட்டுகின்றார். அவருடைய பெயரே அவர் சிவனிடம் நீங்காத ஈடுபாடு உடையவர் என்பதைக் காட்டுகிறது. எனவேதான் அவருடைய பாடலில் சிவனைப் பற்றிய குறிப்புக்கள் காண முடிகிறது. இவ்வாறு கடவுள் தங்கும் இடங்களுக்கு அக்கடவுள் பெயரையே இடும் வழக்கம் உண்டு எனவும் காண்கின்றோம். பெருங்குன்றூர்க்கிழார் இவ்வாறு ஒரு காடு இருந்ததைக் 'கடவுள் பெயரிய கானம்' (பதிற்: 9) என்றே காட்டுகின்றார். இவ்வாறு எல்லையற்ற ஆண்டவனைக் கற்றார் மட்டுமின்றிக் கல்லாரும் கண்டு உணர்ந்து போற்றவேண்டி, எல்லையிட்ட இடத்திலே அமைத்து வழிபட அன்றைய தமிழ் மக்கள் தொடங்கிவிட்டனர் என அறிகின்றோம். இனி அவர்கள் வழிபட்ட முறைகளுள் ஒன்றிரண்டு கண்டு மேலே செல்வோம்.

**வழிபாட்டு முறைகள்:**

கடவுளருக்குப் பலியிட்டுப் பணிகின்ற வழக்கம் இருந்தது என அறிகிறோம். முருகனுக்கு 'மறி' அறுத்தார்கள் எனத் திருமுருகாற்றுப்படையே குறிக்கின்றது. இவ்வாறு பலியிட்டுப் பரவிய வணக்கத்தையும், அவர்கள் அவ்வாறு பலியிட்டு ஆற்றிய வழிபாடு அச்சத்தின் பாற்பட்டது என்பதையும்,

'கணங்கெழு கடவுட்கு உயிர்ப்பலி தூஉய்ப்
பரவினம் வருகம் சென்மோ தோழி' (நற். 380)

என்ற நற்றிணை அடிகள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

நன் மகப்பேறு எய்தற்குக் கடவுளை வணங்குவர் என்பதையும் அவ்வணக்கத்தின் வழிப் பேறுபெற்றுச் சிறந்தார்கள் என்பதையும்,

''குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்''

என்ற ஐங்குறுநூற்று (253) அடிகள் எடுத்துக் காட்டுகின்றன. தலைவி தம் குலதெய்வத்துக்குச் சிறக்க ஆற்றும் வழிபாட்டு முறையை அதே நூல் நன்கு காட்டுகின்றது:

''குன்றக் குறவன் காதன் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுட் குலமுதல் வாழ்த்தித்
தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையள்'' (ஐங்குறு. 259

என்று அவர்கள் மலர்தூவி வழிபட்டதை இவ்வடிகள் காட்டுகின்றன.

சங்க காலத்தில் இறைவனைப் போற்றுவதற்கு மரபுநெறி-பழக்க வழக்க முறைகள் இருந்தன எனக் காண்கின்றோம். அவை எத்தகைய என்பது விளக்கமாகக் காணப் பெறாவிடினும் மேலே கண்ட குறுந்தொகைப் பாடல்களாலும், திருமுருகாற்றுப் படை போன்ற பிறவற்றாலும் ஓரளவு நன்கு தெரிகின்றது. அவையெல்லாம் ஈண்டு விரிப்பில் பெருகும். எனினும் இறைவழிபாடு மரபு வழிகெடாது நடைபெற்று வந்தது என்ற உண்மையை,

''தொன்றொழுகு மரபில் தம்இயல்பு வழாஅது
அருந்திறல் கடவுள் பழிச்சிய பின்றை'
(மலைபடு. 537 —38)

என்ற பெருங்கௌசிகனாரது அடிகள் நமக்கு அறிவுறுத்துகின்றன. மற்றும் அக்காலத்தில் வழிபடுமுறையில் கல் நட்டுப் பீலிசூட்டி, துடி எழுப்பி, கள்ளும் பலியும் கொடுக்கும் சாதாரண வழக்கம் உண்டு என்பதை,

'வல்லான் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலிகொடுக்கும்'
(அகம். 35)

என்ற அகநானூற்று அடிகள் நன்கு காட்டுகின்றன. அங்கி வேட்டு ஆண்டவனை வழிபடும் முறை உண்டு என்பதையும் அச்செயல் ஆற்றுகின்றவர் ஆன்றவிந்தடங்கிய முனிவர் என்பதையும்,

'அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும்
ஆவுதி நறும்புகை'' (பட்டின. 55-56)

என்ற உருத்திரங்கண்ணனார் வாய்ச்சொல் நமக்கு உணர்த்துகின்றது. இம்மை வாழ்வு மட்டுமன்றித் துறக்க வாழ்வும் உண்டு என்பதை அன்றைய தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர். துறக்க வாழ்வு அல்லது தேவ உலக வாழ்வு சிறந்த ஒன்று அல்ல என்பதைச் சாத்தனார் மணிமேகலையில் நன்கு காட்டுகிறார். என்றாலும் உலகில் அறமாற்றிச் சிறப்பார் அத்துறக்க வாழ்வு பெறுவார் என்பதும், அது இன்ப உலகம் என்பதும், அது பெறுதற்கரிது என்பதும் அவர்கள் கொண்ட கொள்கை என்பதை,

''பெறற்கரும் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்
பொய்யா மரபில் பூமலி பெருந்துறை''
(பெரும். 388-89)

என்ற அடிகள் நமக்குக் காட்டுகின்றன. எனவே சங்ககாலச் சைவ நெறியில் இன்று காணும் அத்தனை உண்மைகளும் அடங்கி இருந்தன என்பது தேற்றம்.

இன்னும் சிவனைப் பற்றியும் அவன் ஆடல் இடம் முதலியன பற்றியும் பலப்பல பாடல்கள் சிறக்கப் பாராட்டுகின்றன. அவன் சுடுகாட்டில் ஆடுவது பற்றியும், கொடு கொட்டி ஆடுதல் பற்றியும், சூலப்படை உடைமை பற்றியும், பாண்டரங்கம் ஆடுதல் பற்றியும், புலித்தோலுடை பற்றியும், இவை போன்ற எத்துணையோ செயல்கள் பற்றியும் பலப்பல இடங்களைச் சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன. முருகனைப் பற்றியும் அவனது இரு மனைவியரைப் பற்றியும், அவன் படைவீடுகள் பற்றியும், பிற வரலாறுகள் பற்றியும் கூறும் பாடல்கள் பலப்

பல. தெய்வத்திற்குக் கல் உருக் கொடுத்தல் பற்றியும், காணிக்கை அளித்தல் பற்றியும், தெய்வத்தினிடம் பொருள் வேண்டுதல் பற்றியும், தெய்வத்திற்குக் கையுறை கொடுத்தல் பற்றியும், நிலம் தானம் செய்தல் பற்றியும், உயிர்ப்பலியும் பூப்பலியும் செய்தல் பற்றியும், மஞ்சளும் பூவும் அணிதல் பற்றியும், தெய்வத்தைச் சுட்டிச் சபதம் செய்தல் பற்றியும், வணங்கி வஞ்சினம் உரைத்தல் பற்றியும், தெய்வத்தை வேண்டிக் குழந்தை பெறுதல் பற்றியும், தெய்வ வழிபாட்டு முறை பற்றியும் இவை, போன்ற பிறபற்றியும் பலப்பல சங்கப்பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன. அவற்றையெல்லாம் அறிந்தோர் வாய்ப்பு உள்ள வேளையில் கற்று நலன்கண்டு சிறக்க எனக் கூறி மேலே செல்கின்றேன்.

**முதலிடம் சிவனுக்கே:**

நிற்க, இந்த இரு பெருங்காவியங்கள் உண்டான காலத்தில் நாட்டில் சமணமும் பௌத்தமும் கால்கொள்ளத் தொடங்கி வளரவும் பெற்றன என்றாலும், சைவ சமயமே மேலோங்கி இருந்ததென்பதும், சிவனே அனைத்துக்கும் முதற்கடவுளாகப் போற்றப்பட்டனன் என்பதும் நன்கு விளங்கும். சமண சமய இளங்கோ வடிகள் புகாரில் உள்ள கோயில்களை வரிசைப் படுத்திக் காட்டும்போது, சிவனை முதலிலும் அறுமுகனை அடுத்தும் வைத்துப் பிற தெய்வங்களைப் பின்வைத்துப் பேசுகிறார். அவர் சிவனைப் 'பிறவாயாக்கைப் பெரியான்' என்கிறார். அவர் கருவிருந்து பிறவாத காரணத்தால்,

*''பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
*அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்*
*வால்வளை மேனி வாலியோன் கோயிலும்*
*நீலமேனி நெடியோன் கோயிலும்'' (சிலம்பு, 169-172)*

என அவர் காட்டுகின்றார். மற்றும் பின், செங்குட்டுவனைக் கூறும்போது அவன் சிவன் அருளால் பிறந்தவன் என்றும், வடக்கு நோக்கிச் செல்லும்போது சிவனைமுன் வழிபட்டுப் பின் திருமாலை வணங்கிச் சென்றான் என்றும் காட்டுகின்றார். எனவே, சங்கம் மருவிய சிலப்பதிகார காலத்திலும் அரசரும் பிறரும் தமிழ்நாட்டில் சிவனையே முதற்றெய்வமாகப் போற்றி வழிபட்டார்கள் என அறிகிறோம்.

மணிமேகலை ஆசிரியர் புகார் நகரிலுள்ள பல்வேறு தெய்வங்களைக் காட்டுகின்றார். வள்ளுவன் விழா அறைகாதையில் அந்நகர மக்கள் செய்யும் விழாச் சிறப்புக்களைக் காட்டும்போது அவரவர் தெய்வங்களுக்கு ஆற்றும் சிறப்பைக் குறிக்கின்றார். அதில் தெய்வங்களைக் காட்டும்போது,

*''நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்*
*பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக''*
*(மணிமே. 1, 54-55)*

எனக் காட்டிச் சிவனுக்கே ஏற்றம் தந்து போற்றுகின்றார். எனவே, தமிழ்நாட்டில் சங்ககாலத்திலும் அதை ஒட்டிய காப்பியகாலத்திலும் சைவமே சிறந்த சமயமாகி நின்றது என்பதும், பல தெய்வங்கள் நாட்டில் இருந்தாலும் சிவனே முழுமுதல் தெய்வமாகப் போற்றப்பட்டார் என்பதும் வெளிப்படை.

**முடிவுரை:**

இவ்வாறு சிறந்த பெயரால் போற்றப்படும் தெய்வநெறி சங்ககாலத்திய நெறி என்பதும், அத்தெய்வ வரிசையில் சிவனே முதல் இடம் பெற்றுப் போற்றப்பட்டான் என்பதும், அதனால் சங்ககாலத்தில் சைவமே தலைசிறந்து ஓங்கிய மெய்ச் சமயமாகி விளங்கியது என்பதும், தென்னாடுடைய சிவன் பின் எந்நாட்டவருக்கும் இறையாகத் தொடங்கிய காலம் அதுதான் என்பதும், சங்ககாலத் தமிழ் மக்கள் வாழ்வாங்கு வாழ்ந்து மெய்ம்மை நெறிச் சைவமாம் சமயம் சார்ந்து தழைத்தார்கள் என்பதும் அறியக் கிடக்கின்றது.

---

## நல்லதே செய்க!

Do all the good you can,
In all the ways you can,
In all the places you can,
At all the times you can,
To all the people you can,
As long as ever you can!

—John Wesley.

*நல்லதே எலாமும் செய்க! எல் லாப்பல்*
*நல்வழி களிலுமே செய்க!*

*எல்லாப்பல் இடங்க ளிலும்செய்க! எல்லா*
*நேரங்கள் தம்மிலும் செய்க!*

*பொல்லார்நல் லார்என்று எண்ணற்க! எவர்க்கும்*
*பொருந்துறும் பொழுதெலாம் செய்க!*

*கல்லார்கள் நன்கு கற்றார்கள் யாரும்*
*இதுகடைப் பிடித்தொழுகல் நன்றாம்!*

—ந. ரா. முருகவேள்

# திருவருட்பாவில் திருஅங்கமாலை

திரு. கனக. சுப்பிரமணியம், சென்னை.

உலகில் வாழும் மக்கள் நன்னெறியைக் கடைப்பிடித்து நல்வாழ்வு வாழ்ந்திட உலகின் பல பாகங்களிலும் ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு இனத்திலும் ஒவ்வொரு மொழியிலும் அவ்வப்போது அருட்சான்றோர்களை இறைவன் தோற்றுவிப்பான். அதற்கிணங்கச் சென்ற நூற்றாண்டில் செந்தமிழ்நாட்டில் இந்துமதத்தில் சைவசமயத்தில் தோன்றியவர்களுள் அருட்பிரகாச வள்ளலார் எனவழங்கும் இராமலிங்க அடிகளாரும் ஒருவராவர். வள்ளற்பெருமானார் செந்தமிழ்நாட்டில் இந்துமதத்தில் சைவசமயத்தில் தோன்றியவர் என்றாலும், எந்நாட்டவரும் ஏற்றிப்போற்றும் கருத்துக்களையும், எம்மதத்தாரும் சம்மதத்தோடு ஏற்றுக்கொள்ளக்கூடிய கருத்துக்களையும், எச்சமயத்தாரும் மெச்சத்தகுந்த கருத்துக்களையும், தாம் எழுதியருளிய திருவருட்பா நூலில் எடுத்துச் சொல்லியுள்ளார்.

திருஅருட்பா என்பது ஓர் கற்கண்டுமலை. செந்தமிழ்ச் சொற்களால் ஆன அக் கற்கண்டு மலையில் எப்பகுதியைச் சுவைத்தாலும் அது இனிக்கும். திருவருட்பாவில் உள்ள பாடல்கள் எளிமையும் இனிமையும் சொற்சுவையும் கருத்தாழமும் கவிதைநயமும் கொண்டவையாகும். அப்பாடல்களைப் படிக்கப் படிக்க இறையுணர்வும் தமிழுணர்வும் பீறிட்டெழும். படிக்கப் படிக்கப் பயன்தரும் பாடல்கள், சுவைக்கச் சுவைக்க இனித்திடும் தமிழ்ச்சொற்கள், வாழ்வாங்கு வாழ்ந்திட வழிகாட்டும் வளமைமிக்க கருத்துக்கள் ஆகியவை திருவருட்பாவில் நிறைந்துள்ளன.

தெய்வ மணங்கமழ்ந்து தேனென இனிக்கும் திருவருட்பாவில் உள்ள பாடல்களைத் தெள்ளு தமிழில் எழுதிய வள்ளற்பெருமான் அவர்கள், ஓதாது உணர்ந்த ஒழுக்கசீலர். இறை அருளால் இளமைப்பருவத்திலேயே இனிய எளிய சொற்சுவைமிக்க கருத்தாழங்கொண்ட பாக்களை இயற்றிடும் பக்குவங்கொண்ட பாவேந்தர். அவர் ஏட்டுக்கல்வியில் நாட்டம் செலுத்தாது, இறையருளால் இறைவனிடமே நேராகவும் சீராகவும் பயின்றவர். இலக்கண நூற்களைக் கற்காமலே இலக்கணப் பிழையின்றிப் பாடல்களை இயற்றிடும் புலமையும் பெருமையும் படைத்த இராமலிங்க அடிகளார் அவர்கள், அவர் காலத்தில் இருந்த இறை ஒழுக்க நூல்களையும், இன்னபிற நன்னூல்களையும் பள்ளிக்குச் செல்லாமலும், பிறர் பயிற்றுவிக்காமலும் தாமாகவே முழுவதும் ஓதாது உணர்ந்ததைப் பற்றி அவர் எழுதியுள்ள திருவருட்பாவில், 'திருப்பள்ளியெழுச்சி'யில்,

''முனைப்பள்ளி பயிற்றாதென் றனைக்கல்வி பயிற்றி
முழுதுணர் வித்துட்ற் பழுதெலாந் தவிர்த்தே
எனைப்பள்ளி யெழுப்பிய அருட்பெருஞ் சோதி''

என்றும், அருட்பெருஞ்சோதி அகவலில்,

''ஓதா துணர்ந்திட வொளியளித் தெனக்கே
ஆதார மாகிய வருட்பெருஞ் சோதி''

என்றும் எடுத்துக் காட்டியுள்ளார். வள்ளற்பெருமான் அவர்கள், பாவேந்தராக மட்டுமின்றி, பகுத்தறிவாளராகவும் பைந்தமிழ்க் கட்டுரையாளராகவும் சிறந்த பேச்சாளராகவும் சீர்திருத்தச் செம்மலாகவும் மருத்துவத் துறையில் வல்லுநராகவும் இசையறிவு கொண்டவராகவும் விளங்கினார் என்பதை, அவர் எழுதியருளிய திருவருட்பா நூலில் உள்ளபகுதிகள் அனைத்தையும் படித்தவர்களால்உணர்ந்து கொள்ள முடியும்.

திருவருட்பாவில் உள்ள பாடல்களில், சென்னைக் கந்தகோட்டத்தில் எழுந்தருளியுள்ள கலியுக வரதனாம் கண்கண்டதெய்வம் கந்தவேளைப்பற்றிப் பாடிய முப்பத்தொன்று பாடல்கள் கொண்ட பகுதி ''தெய்வமணி மாலை'' என்பதாகும். இத் தெய்வமணி மாலையில் உள்ள பதினெட்டாவது மற்றும் பத்தொன்பதாவது பாடல்களில் எதிர்மறை முறையிலும், உடன்பாட்டு முறையிலும் வற்புறுத்தப்பெறும் அழகிய சிறந்த கருத்துக்கள் பல உள்ளன.

இறைவனால் பிறப்பிக்கப்பெற்ற புனிதப் பிறவி இம் மனிதப்பிறவியாகும். இம் மனித உடலிலுள்ள உறுப்புக்கள் ஒவ்வொன்றும் தம்மைப் படைத்த இறைவனுக்குத் தொண்டுகள் செய்ய வேண்டும். அப்படி இறைவனுக்குத் தொண்டுகள் செய்யாவிட்டால் இப்பிறவி எடுத்ததில் பயனே இல்லை என்று நந்தமிழ் இலக்கியங்கள் நவில்கின்றன. உலகப் பொது மறையாம் திருக்குறளில் 'கடவுள் வாழ்த்து' அதிகாரத்தில் உள்ள ஒன்பதாவது குறளில்,

''கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை''

என்று தெய்வப்புலவர் திருவள்ளுவர், ''எண்வகைக் குணங்களைச் சிறப்பாக உடைய இறைவனின் திருவடிகளை வணங்காத தலையானது, கேளாக் காதுகளும், காணாக் கண்களும் போலப் பயனற்றவை; எனவே நாம் இறைவனின் திருவடிகளை வணங்க வேண்டும்'' என்று கூறியுள்ளார்.

இதுபோலவே, திருநாவுக்கரசு சுவாமிகளும் தாம் பாடியருளிய தேவாரத்தில் 'திரு அங்கமாலை' என்னும் திருப்பதிகத்தில் ''தலையே நீ வணங்காய்'' எனத் தொடங்கும் பாடலில் உடலுறுப்புக்கள் அனைத்தும் இறைவனுக்குச் செய்யவேண்டிய தொண்டுகளைத் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்துக் காட்டியுள்ளார்.

அவ்வண்ணமே அருட்டிரு இராமலிங்க அடிகளாரும் வாய் தலை கண்கள் காதுகள் நெஞ்சம் கைகள் ஆகிய ஆறு உறுப்புக்களும் என்னென்ன செய்யவேண்டும் என்றும், அவ்வாறு தொண்டு செய்யாத உறுப்புக்களை இகழ்ந்தும், தொண்டுசெய்யும் உறுப்புக்களைப் புகழ்ந்தும், கீழ்க்காணும் இரண்டு பாடல்கள் மூலம் புனிதப் பிறவியாகிய மனிதப்பிறவி எடுத்த நமக்கு எடுத்துக்காட்டியுள்ளார். அப்பாடல்களை ஒருவகையில், நாம் திருவருட்பாவில் அமைந்துள்ள திருஅங்கமாலை எனலாம்.

''எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய், கூழுக்கும்
 ஏக்கற்றி ருக்கும் வெறுவாய்;
எங்கள்பெரு மானுனை வணங்காத மூடர்தலை,
 இகழ்விறகு எடுக்குந் தலை;
கந்தமிகு நின்மேனி காணாத கயவர்கண்,
 கலநீர் சொரிந்து அழுகண்;
கடவுள்நின் புகழ்தனைக் கேளாத வீணர்செவி,
 கைத்திழவு கேட்குஞ் செவி;
பந்தமற நினைஎணாப் பாவிகள்தம் நெஞ்சம்,
 பகீரென நடுங்கும் நெஞ்சம்,
பரமநின் திருமுன்னர்க் குவியாத வஞ்சர்கை,
 பலியேற்க நீள்கொ டுங்கை;
சந்தமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
 தலமோங்கு கந்த வேளே!
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
 சண்முகத் தெய்வ மணியே!''

''ஐயநின் சீர்பேசு செல்வர்வாய், நல்லதெள்
 அமுதுண்டு உவந்த திருவாய்;
அப்ப! நின் திருவடி வணங்கினோர் தலை, முடி
 அணிந்தோங்கி வாழுந் தலை;
மெய்ய! நின் திருமேனி கண்டபுண் ணியர்கண்கள்,
 மிக்கவொளி மேவு கண்கள் ;
வேல! நின் புகழ்கேட்ட வித்தகர் திருச்செவி,
 விழாச்சயஞ் கேட்குஞ் செவி ;
துய்ய! நின் பதம்எண்ணும் மேலோர்கள் நெஞ்சம்!
 சுகரூப மான நெஞ்சம்;
தோன்றல்! உன் திருமுன் குவித்தபெரி யோர்கைகள்
 மெய்ச் சுவர்னமிடு கின்ற கைகள்;
சையமுயர் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
 தலமோங்கு கந்தவேளே!
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
 சண்முகத் தெய்வ மணியே!

என்று கூறுகின்றார். இத் திருப்பாடல்களின் படி, வாய் இறைவனை வாழ்த்தி அவன் சீர் பேசவேண்டும். தலை இறைவனின் திருவடிகளை வணங்கிடல் வேண்டும். கண்கள் இறைவனின் மேனியைக் கண்டு மகிழ்ந்திடல் வேண்டும். காதுகள் இறைவனின் புகழ்தனைக் கேட்டு மகிழ்ந்திடல் வேண்டும். நெஞ்சம் இறைவனின் பாதங்களை நினைந்திடல் வேண்டும். கைகள் இறைவன் முன்னிலையில் குவிந்து வணங்கிடல் வேண்டும்.

மேற்கண்டவாறு தொண்டுசெய்யாத உறுப்புக்களை உடையவர்கள் யார்? அந்த உறுப்புக்களால் யாது பயன்? என்பதையும், தொண்டு செய்பவர்கள் யார்? அந்த உறுப்புக்களால் ஏற்படும் நன்மைகள் யாவை? என்பதையும் எதிர்மறை உடன்பாட்டு முறைகளில் அழகுற அரிய இனிய பாடல்களை அடுத்தடுத்துத் தெய்வமணிமாலையில் இராமலிங்க அடிகளார் எழுதியுள்ளார்.

(1) இறைவனுக்குத் தொண்டு செய்யாத வாய்தனை உடையவர்கள் பேயர்கள்; அவர்கள் வாய் கூழுக்கும் ஏக்கற்றிருக்கும் வெறுவாய்; ஆனால் தொண்டு செய்யும்வாய் உடையவர்கள் செல்வர்கள்! அவர்கள் வாய் நல்ல தெள்ளமுதுண்டு உவந்த திருவாய்! அல்லாதது வெறுவாய், இது திருவாய்.

(2) இறைவனுக்குத் தொண்டு செய்யாத தலையை உடையவர்கள் மூடர்கள். அவர்கள் தலை விறகுச்சுமை எடுக்குந்தலை. ஆனால் தொண்டு செய்யும் தலையை உடையவர்கள் தலைமுடி அணிந்து ஓங்கி வாழுந்தகைமையை உடையவர்கள்.

(3) இறைவனுக்குத் தொண்டு செய்யாத கண்களை உடையவர்கள் கயவர்கள். அவர்கள் கலநீர் சொரிந்து அழுகின்ற கண்களை உடையவர்கள். ஆனால் தொண்டு செய்யும் கண்களை உடையவர்கள், புண்ணியர்கள். அவர்கள் கண்கள் மிக்க ஒளி மேவுகின்ற கண்கள்.

(4) இறைவனுக்குத் தொண்டு செய்யாத காதுகளை உடையவர்கள் வீணர்கள். அவர்கள் காதுகள் கசப்புத் துன்பம் மிக்க இழவுச் செய்திகளைக் கேட்கும் காதுகள். ஆனால் தொண்டு செய்யும் காதுகளை உடையவர்கள் வித்தகர்கள். அவர்களின் திருச்செவிகள் நல்லவிழாச் செய்தி கேட்கும் காதுகள்.

(5) இறைவனுக்குத் தொண்டு செய்யாத நெஞ்சத்தை உடையவர்கள் பாவிகள். அவர்கள் நெஞ்சம் பகீரென நடுங்கும். ஆனால் தொண்டு செய்யும் நெஞ்சம் உடையவர்கள் மேலோர்கள். அவர்கள் நெஞ்சம் மெய்ச்சுகரூபமான நெஞ்சம்.

(6) இறைவனுக்குத் தொண்டு செய்யாத கைகளை உடையவர்கள் வஞ்சகர்கள். அவர்கள் கைகள் பிச்சை எடுப்பதற்கு முந்தி நீளுகின்ற கொடிய கைகள். ஆனால் தொண்டு செய்யும் கைகளை உடையவர்கள் பெரியோர்கள். அவர்களின் கைகள் பொன் அணிகள் பூண்டு, இரவலர்க்குப் பொன்னும் பொருளும் வாரி வழங்குகின்ற கைகள்.

இறைவனுக்குத் தொண்டு செய்யாதவர்களைப் பேயர்கள் மூடர்கள் கயவர்கள் வீணர்கள் பாவிகள் வஞ்சகர்கள் என்று கொடிய சொற்களால் சாடித் தூற்றி இகழ்ந்த இராமலிங்க அடிகளார், இறைவனுக்குத் தொண்டு செய்பவர்களைச் செல்வர்கள், மணிமுடி அணிந்தோங்கியவர்கள், புண்ணியர்கள், வித்தகர்கள் மேலோர்கள் பெரியோர்கள் என்று போற்றிப்புகழ்ந்துள்ளதை நாம் இங்கு ஊன்றிப் பார்த்து உணர்ந்திடல் வேண்டும்.

எனவே, மேற்காணும் இரு பாடல்களையும் ஊன்றிப்படித்து இறைவனை வாழ்த்திச் சீர்பேசும் வாயும், அவன் திருவடிகளை வணங்கிடும் தலையும், அவன் திருமேனியழகைக் கண்டு மகிழும் கண்களும், அவன் புகழ்தனைக் கேட்டு மகிழும் செவிகளும், அவன் திருவடிகளை நினைக்கும் நெஞ்சமும் பெற்று, இறைவன் முன்னிலையில் கைகுவித்து வணங்கி நாள்தோறும் தவறாமல் மனித உறுப்புக்கள் செய்ய வேண்டிய புனிதத் தொண்டுகளைச் செம்மையாகச் செய்து, இப்புனிதப் பிறவியாகிய மனிதப்பிறவி எடுத்ததன் பயனைப் பெற்று, நாம் வாழ்வாங்கு வாழ்வோமாக.

# பழந்தமிழ் இலக்கியத்தில் இராமாயணம்

திரு. ம அ. முருகேசன், B.A., B.L., மதுரை

திருமகள் கேள்வனான திருமால், மானிட உருவம் தாங்கி, இப் புண்ணிய பூமியில் நடந்து ''மண்ணிடை மாதவம் அறத்தொடு வளர்த்த'' கதையைத்தான் இராமாயணம் என்கின்றோம். இக்கதையைக் காப்பியமாக முதன் முதலில் செய்தவர் வால்மீகி முனிவர் என்பதும், அவர் செய்த அக் காப்பியம் ஆதிகாவியம் என்பதும், எல்லோராலும்ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. அதைத் தழுவி, கூட்டியும் குறைத்தும், விரித்தும் சுருக்கியும் ஒப்பற்ற ஓர் உன்னத காவியம் படைத்து, அதற்கு ''இராமாவதாரம்'' எனப் பெயரிட்டார், கல்வியில் பெரிய கம்ப நாட்டாழ்வார். வான்மீகியைத் தழுவியே கம்பர் தம் காவியத்தை அமைத்தார் என்பதற்கு அவர் காவியத்திலேயே அகச் சான்றுகளும், வெளியே புறச்சான்றுகளும் நிறையக் கிடைக்கின்றன.

> ''வாங்க அரும் பாதம் நான்கும்
> வகுத்த வான்மீகி என்பான்
> தீங்கவி செவிகள் ஆரத்
> தேவரும் பருகச் செய்தான்.
> ஆங்கவன் புகழ்ந்த நாட்டை,
> அன்பு எனும் நறவம் மாந்தி,
> மூங்கையான் பேச லுற்றான்
> என்ன, யான் மொழியலுற்றேன்''

என்பது கம்பர் வாக்கு.

> ''நாரணன் விளையாட் டெல்லாம்
> நாரத முனிவன் கூற
> ஆரணக் கவிதை செய்தான்
> அறிந்தவான் மீகி என்பான்;
> சீர்அணி சோழ நாட்டுத்
> திருவழுந் தூருள் வாழ்வோன்
> கார்அணி கொடையான் கம்பன்
> தமிழினாற் கவிதை செய்தான்''

என்பது தனியன்.

இராமாயணத்தை முதன்முதலில் பாடியவர் வான்மீகியே என்று ஒப்புக் கொண்டபோதிலும், இன்னும் இருவர் பாடியிருக்கலாம் என்பது, கம்பருடைய வாக்கினாலேயே தெரிகிறது. பாயிரத்தில், நூல் வழி சொல்ல வந்த கம்பர்,

> ''தேவபாடையின் இக்கதை செய்தவர்
> மூவ ரானவர் தம்முளும், முந்திய
> நாவினார் உரையின்படி, நான் தமிழ்ப்
> பாவினார் இது உணர்த்திய பண்பு அரோ''

என்று பாடுகிறார். இப்பாடலால் வடமொழியில் இராமாயணம் செய்தவர் மூவர் என்பதும், அம்மூவரில் முதல்வர் பாடியதைக் கம்பர் தமிழில் ஆக்கினார் என்பதும் பெறப்படுகிறது. வான்மீகி, போதாயனர், வசிட்டர் என்பவர்களே அம்மூவர் என்று கூறப்படுகிறது. ஆகவே தமிழில் கம்பர் இராமாயணம் பாடுவதற்கு முன்பு வடமொழியில் மூன்று இராமாயணம் இருந்திருக்க வேண்டுமென்று கருத இடம் இருக்கிறது.

ஆதி காவியத்தைப் பின்பற்றி எழுந்த இராமாவதாரமே, முதன் முதலில் தமிழில் எழுதப்பட்ட இராமாயணம் என்றும், அதன் பிறகே தமிழ் நாட்டிற்கு இராமகாதை வந்தது என்றும் கருத்து நிலவுகிறது. ஆய்ந்து பார்க்கில், கம்பனுடைய இராமாயணத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே, இராமகாதை தமிழ் நாட்டில் மிகப் பரவலாக மக்களிடத்திலே வழங்கி வந்தது என்பதற்கு நிறைய ஆதாரங்கள் இருக்கின்றன. பாட்டிலும், தொகையிலும், அதைச் சார்ந்த பல பண்டைத் தமிழ் நூல்களிலும், இராமாயணம் பேசப்பட்டிருக்கிறது. சங்கப்புலவர்களில் வான்மீகனார் என்ற பெயர்கொண்ட புலவர் ஒருவர் இருந்தார் என்பது, தொல்காப்பியம் பொருள் அதிகாரத்தில், புறத்துறையில் ''அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்'' என்ற சூத்திர உரையில் நச்சினார்க்கினியனார் கூறுவதிலிருந்து அறியப்படுகிறது. புறநானூற்றிலே 358-ஆம் பாட்டு வான்மீகனார் பாடிய பாடல் என்று காணப்படுகிறது.

> ''ஆள்வினை முடித்த அருந்தவ முனிவன்
> வேள்வி போற்றிய இராமன் அவனொடு
> மிதிலை மூதூ ரெய்திய ஞான்றே
> மதியுடம் பட்ட மாக்கட் சீதை
> கடுவிசை வில் நாண் மடியொலி கேளாக்
> கேட்ட பாம்பின் வாட்ட மெய்தித்
> துயிலெழுந்து மயங்கினள் அதான்று''

இனி, அகநானூற்றிலும் புறநானூற்றிலும் 'இராமாயணம்' பேசப்படுவதைக் காணலாம். புறம் 378.ஆவது பாடலில்,

கடும்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந்தாங்கு

என வருகிறது. அகநானூறு 70-வது பாடலில்

''வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிடும் பவ்வம் இரங்கு முன்துறை
வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த
பல்வீழ் ஆலம் போல்''

என்று வருகிறது. எட்டுத்தொகை நூல்களில் ஒன்றாகிய பரிபாடலில் அகலிகை பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

''இந்திரன் பூசை; இவள் அகலிகை; இவன்
சென்ற கவுதமன்; சினன் உறக் கல்லுரு
ஒன்றியபடி இது......'' (பரிபாடல், 19-வரி 50-52)

பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றாகிய திருக்குறளில் அகலிகை கதை பேசப்படுகிறது. பிறர் மனை நயத்தலை இகழ வந்த திருவள்ளுவரும், ''ஐந்தவித்தா னாற்றலகல் விசும்புளார் கோமானிந் திரனே சாலுங் கரி'' என இராமாயணக் கதையினைக் குறிப்பிட்டுள்ளார். சங்க இலக்கியங்களுக்குப் பிற்பட்ட ஐம்பெருங் காப்பியங்களிலும் இராமாயணம் பரவலாகப் பேசப்படுகிறது. சிலப்பதிகாரம், ஊர்காண் காதையிலே,

''தாதை ஏவலின், மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீ அறிந்திலையோ? நெடுமொழி அன்றோ?

என்று இளங்கோவடிகள் பாடுகிறார்.

இவ்வரிகளிலிருந்து இராமன் திருமாலின் அவதாரம் என்பதும், அவ்வழக்கு நீண்ட நெடுங்காலமாக (நெடுமொழியாக) நின்று நிலவி வந்தது என்பதும் காணக்கிடக்கிறது. இரட்டைக் காப்பியங்களில் ஒன்றாகிய 'மணி மேகலையில்

''நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீர் அடைத்த ஞான்று
குரங்குகொணர்ந் தெறிந்த நெடுமலை யெல்லாம்
அணங்குடை யரக்கர் வயிறுபுக் காங்கு''

என்று இராமாயண நிகழ்ச்சி ஒன்றைச் சாத்தனார் எடுத்தாண்டிருக்கிறார்.

உரை ஆசிரியர்களும், தத்தம் உரைகளிலே வெண்பாவிலும் ஆசிரியப்பாவிலும் இராமாயண நிகழ்ச்சிகளைக் கூறும் பாடல்களைக் காட்டியுள்ளனர். ஆசிரிய மாலையிலிருந்து புறத்திரட்டில் தொகுக்கப்பட்ட பாடல்களில் இராமாயணநிகழ்ச்சிகள் உள்ளன.

இது தவிர, புறத் துறைக்கு எடுத்துக்காட்டுக் கூறவந்த உரை ஆசிரியர்களும், இராமாயண நிகழ்ச்சிகளைக் கூறியுள்ளனர். தொல்காப்பியம் புறத்துறை 12-ஆம் சூத்திரத்தில், எயில்கோடல், எயில்காத்தல், தானைமறம், என்ற துறைகளுக்கு இராமாயண நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டியிருக்கின்றனர்.

''ஆனா வீகை அடுபோர்'' என்னும் 42-ஆம் புறப்பாட்டு அது. ''இராமன் இலங்கை கொள்வதன் முன் வீடணனுக்குக் கொடுத்த துறையும் அது'' என்றும், ''இருசுடர் இயங்காப் பெருமூதூர் இலங்கை நெடுந்தோள் இராமன் கடந்த ஞான்றை'' என்றும் பாடப்பட்டிருக்கிறது.

''கட்டில் நீத்த பால்'' என்ற துறைக்கு நச்சினார்க்கினியர் இராமாயண வரலாற்றை எடுத்துக் காட்டி உள்ளார்.

''கடலும் மலையும் நேர்படக் கடந்த
மண்ணாக வளாக நுண் எயிற்றுக் களிறு
நொய்தாலம்ம தானே இஃதிவன்
குறித்தன நெடியோன் கொல்லோ மொய்தவ
வாங்குசிலை இராமன் தம்பி ஆங்கவன்
அடி பொறையாற்றின் அல்லது
முடிபொறை ஆற்றலன் படிபொறை குறித்தே''

பின்னும், இராமன் விபீடணனுக்கு முடி சூட்டியதை ''கொள்ளார் தேயம் குறித்த கொற்றம்'' என்ற புறத்துறைக்கும், ''இன்று போய்ப் போர்க்கு நாளை வா'' என்று இராகவன் இராவணனுக்குச் சொன்னதைத் 'தழிஞ்சி' என்ற புறத்துறைக்கும் எடுத்துக்காட்டாகக் காட்டியுள்ளார். புறத்திரட்டு 20-ஆம் சூத்திர உரையில் ''இராமாயணமும் பாரதமும் போல்வன இலக்கியம்'' என்று கூறுகிறார்.

''தொன்மை என்னும் வகுப்பிற்குப் பாரதம் இராமாயணம் முதலானவை கொள்க'' என்று சொல்கிறார். இவ்வுரையில் குறிப்பிடப்படும் இராமாயணம் கம்பருக்கு முன்உள்ள நூலாகவும் இருக்கலாம். பெருந்தொகையில், முதுபெரும் புலவர் திரு. மு. இராகவையங்கார் அவர்கள், உரைகாரர் காட்டிய பாடல்களைப் பழைய இராமாயணம் என்று கூறுகிறார். இவற்றையெல்லாம் பார்க்குமிடத்து, பழைய இராமாயணம் ஒன்று தமிழில் இருந்திருக்கலாமென்று கொள்ளவும் இடமிருக்கிறது. அப்படி, இல்லாமற் போனாலும், இராமாயண நிகழ்ச்சிகளைப் பொருளாகக் கொண்டு தனிப்பாடல்கள் பல வழங்கி வந்தன என்பதில் ஐயத்துக்கே இடமில்லை.

சைவ வைணவ சமய இலக்கியங்களிலும் இராமாயணம் பேசப்படுகிறது. பிரபந்தம் பாடிய பன்னிரு ஆழ்வார்களில் ஒருவராகிய குலசேகர ஆழ்வார், தன்னைத் தயரதனாகவும் இராமனைத் தன் மதலையாகவும் பாவித்துப் பல பாடல்களைப் பாடி இருக்கின்றார். அவர் தம் இராமாயண ஈடுபாடு எல்லையற்றது. ''கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ?'' எனப் பாடுகின்றார் நம்மாழ்வார். ''சினத்தினால் தென்னிலங்கைக் கோமா

னைச் செற்ற மனத்துக்கினியான்'' என்று இராமபிரானைப் புகழ்ந்து போற்றுகின்றாள் ஆண்டாள். இவ்வாறே ஏனைய ஆழ்வார் களும் இராமாயண வரலாறுகளை ஆங்காங்கே எடுத்துப் பாடியிருக்கின்றனர்.

ஆழ்வார்களின் காலத்தில் மட்டுமேயன்றி ஸ்ரீ வைணவ ஆசாரியர்களின் காலத்திலும் இராமசரிதம் மிகப்பெரிதும் பரவி இருந்திருக் கிறது என்பது அவர்கள் செய்த வியாக்கினங் களிலிருந்து தெரிய வருகிறது.

''படி கொண்ட சீர்த்தி இராமாயணம்
என்னும் பக்தி வெள்ளம் குடிகொண்ட
கோயில் இராமாநுசர்''

என்ற உடையவரைத் திருவரங்கத்தமுதனார் ''பிரபந்த காயத்திரி'' என வழங்கும் தமது இராமாநுச நூற்றந்தாதியிற் கூறுகிறார்.

சைவசமய ஆசாரியர்கள் சிவனையன்றி மற்றவர்களைப் பாடுவதில்லை. அப்படிப் பாட நேர்ந்தாலும் சிவனோடு தொடர்பு படுத்தியே பாடுவர். ''நம் செந்தில் மேய வள்ளி மணாளற்குத் தாதை'' என்பதுபோல். அப்படிப் பாடிய நால்வருள் மாணிக்கவாசகர்,

''ஆர்கலி சூழ் தென்னிலங்கை
அழகமர் வண்டோதரிக்குப்
பேரருள் இன்பம் அளித்த
பெருந்துறை மேய பிரானை''

என்று குயில் பத்திலே கூறுகின்றார்.

தமிழ்நாட்டில் இராமாயண வரலாற் றோடு தொடர்புடையனவாகப் பல ஊர்கள், மலைகள் முதலியவற்றைக் குறிப்பிட்டுக் கதைகள் இருக்கின்றன. இராமாயண பாத் திரத்தில் வரும் பெயர்களும் வழக்கத்தில் இருக்கின்றன. இவை எல்லாம், தமிழகத்தில் இராம காதை மிகவும் பரவி மக்கள் மனதில் நிலவி வந்தது என்பதையும், கம்பனுடைய இராமாயணத்துக்கும் முன்பே தமிழகத்தில் இராமகாதை மிகவும் பரவி வழங்கியிருந்தது என்பதையும் காட்டுகின்றன.

## சத்த மாதர்கள்

உலகை இயக்கி ஐந்தொழில்கள் புரிந்துவரும் அருளாற்றலாகிய சக்தியானது, தனக் கென்று ஒரு பெயரும் வடிவமும் இல்லாததாயினும், அன்பர்களின் பொருட்டுப் பலபெயரை யும் வடிவங்களையும் கொள்ளும். இம்முறையில் பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி வராகி, இந்திராணி, சாமுண்டி என்னும் சத்த மாதர்களாகவும் வடிவங்கொண்டு, சக்தி ஒன்றே திகழ்கின்றது. இவ் எழுவருடைய இயல்புகளையும் செயல்களையும் இலக்கியங்கள் ஆங்காங்கே சிறப்புறக் குறிக்கும். யானைத் தோலைப் போர்த்தவள் மகேசுவரி. வானரங் கள் குவித்த மலைகளாற் கடலை அடைத்தவள் நாராயணி. கடலின் வயிறு கிழியும்படி வேற் படையை ஏவியவள் கௌமாரி. கற்பக மலரைக் கூந்தலில் அழகுறச் சூடியவள் இந்திராணி. சிங்கத்தை ஊர்தியாகக் கொண்டவள் காளி. வேதங்களால் மிகவும் புகழ்ந்து சிறப்பிக்கப் பெறு பவள் அபிராமி. பிரளயத்தினின்று உலகை மீட்டருளியவள் வராகி எனப் பலவகைகளில் சக்தியின் வடிவ பேதத்தைச் சாத்திரங்கள் பெரிதும் புகழ்ந்து கூறும்.

சிலப்பதிகாரம் என்னும் செந்தமிழ்க் காப்பியத்தில், அம்மை அல்லது சக்தி வழிபாடு பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன. கொற்றவை, பிடாரி, பத்திரகாளி, காளி, துர்க்கை ஆகிய சக்தியின் வடிவபேதங்கள், சிலப்பதிகாரத்தில் வழக்குரை காதையில் குறிக்கப்பட்டுள்ளன. இவ்வாற்றால், இற்றைக்கு ஏறத்தாழ 1800 ஆண்டுகட்கு முற்பட்ட மிகப் பழங்காலத்திலேயே தமிழ்நாட்டிற் சக்தி வழிபாடும், சக்தியின் வடிவபேதங்களும் பரவிப் பெருகியிருந்தமை தெரிய லாம்.

—ஆசிரியர்.

# சோழர் காலத்தில் தேவி வழிபாடு

திரு என். சேதுராமன், B.Sc., கும்பகோணம்

**முன்னுரை :**

ஆதிகாலம் தொட்டே ''தேவி வழிபாடு'' என்று சொல்லப்படும் அன்னை வழிபாட்டு முறை இருந்து வருகிறது. அன்னையின் பெருமையை எடுத்துக்கூற எண்ணற்ற இலக்கியங்களும் இதிகாசங்களும் உள்ளன. அன்னை வழிபாட்டு முறையைச் 'சாக்தம்' என்னும் வகையைச் சார்ந்த சமய நூல்கள் விரிவாக விளக்குகின்றன.

சோழப் பேரரசு கொடிகட்டிப் பறந்த காலமும் உண்டு. விசயாலய சோழன் கி.பி. 850-ல் சோழப் பேரரசை நிறுவினான். அவன் காலம் முதல் கி.பி. 1279 வரை சோழப் பேரரசு மகோன்னத நிலையில் விளங்கியது. சோழ மன்னர்களும், அவைக்களத்துப் பெரியோர்களும், நாட்டு மக்களும் 'அன்னை வழிபாடு' என்று கூறப்படும் தேவிவழிபாட்டில் தங்களைப் பெரிதும் ஒப்படைத்துக் கொண்டார்கள்.

சோழர்காலத் தேவிவழிபாட்டு முறையை இரண்டு வகையாகக் கொள்ளலாம். முதலில் தேவிக்கு என்றே தனிக் கோயில்கள் உருவாயின. இக்கோயில்களில் பிடாரி, சப்தமாதர்களின் திருவுருவங்கள் பிரதிட்டை செய்யப்பட்டு, வழிபாட்டு முறைகளும் ஏற்படுத்தப்பட்டன. பின்பு, வழிபாட்டில் இருந்துவரும் சிவாலயங்களில் அன்னை உமாதேவிக்குத் தனிக் கோயில்கள் ஏற்படுத்தப்பட்டன. சப்தமாதர்கள், துர்க்கை, சேட்டாதேவி (மூதேவி)போன்ற தேவிமார்களின் திருவுருவங்களும் சிவாலயங்களில் பிரதிட்டை செய்யப்பட்டன.

**நிசும்ப சூதனி :**

சோழர் சாசனங்களில் தஞ்சை 'நிசும்ப சூதனி' முதலிடம் பெறுகிறாள், முதல் இராசேந்திரனின் (கி.பி.1012-1043), திருவாலங்காட்டுச் செப்பேட்டில், மன்னனின் முன்னோர்களின் பரம்பரை விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இதில் விசயாலயன் தஞ்சையைக் கைப்பற்றிச் சோழப் பேரரசை நிறுவினான் என்றும், தஞ்சைக் கோட்டையில் நிசும்பசூதனியின் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்து வணங்கினான் என்றும் சொல்லப்பட்டுள்ளது. நிசும்பசூதனி என்னும் தேவி காளியே ஆவள். இவள் சோழ மன்னர்களின் போர்த் தெய்வம். தஞ்சாவூர்க் குயவன் தெருவில் இன்றும் நிசும்பசூதனி (இரண்டாக உடைந்து ஒட்டப்பட்ட நிலையில்) காட்சி தருகின்றாள். எட்டுக் கரங்களுடன் அசுரனின் மீது இடது காலை வைத்து, வீராசனம் பூண்டு, சூலாயுதத்தால் அசுரனை அழிப்பது போன்று காணப்படும் நிசும்பசூதனி, இன்றும் அன்பர்களுக்கு அருள் பாலித்து வருகிறாள்.

**காளிகோயில்:**

சோழர் காலத்தில், ஒரு கிராமம் அல்லது நகரை அமைக்கும்போது, மேல் திசையில் திருமாலின் கோயிலையும், கீழ்த்திசையில் சிவன் கோயிலையும், வடகிழக்கு மூலையில் பிடாரி (காளி) கோயிலையும் ஏற்படுத்தினார்கள். இப்பிடாரிகோயிலில், காளி எட்டு அல்லது நான்கு கரங்களுடன் காட்சியளிப்பாள். பிடாரிகோயிலில் சப்த மாதர்களின் உருவங்களும் வழிபாட்டில் இருந்தன.

சங்க கால இலக்கியங்களில் 'காடுகிழாள்' என்று வணங்கப்பட்ட அன்னையே பிற்காலத்தில் காளி என்று பெயர் கொண்டாள் என்பதும் அறிஞர் பலர் கருத்து. பிடாரி, காளாபடாரி, காளி என்னும் பெயர்களாலும் அன்னையை வணங்கினர்.

திருச்சி மாவட்டம் நங்கவரம் கிராமத்தில் பழமையான பிடாரி கோயில் ஒன்று இன்றும் வழிபாட்டில் உள்ளது. இக்கோயிலின் கருவறையின் மேற்குச் சுவரின் அடித்தளத்தில் காணப்படும் கல்வெட்டு, முதல் பராந்தகசோழனின் காலத்தியது. இக்கல்வெட்டின் காலம் சுமார் பி.கி. 953. இக் கல்வெட்டு அன்னையைச் ''சர்வசாந்திகரமாய் சர்வ அப்யுதய சம்ருத்யர்த்தமாக எழுந்தருளியிருந்த அரணழிப்ப மாகாளத்துக் காளா படாரியான சாத்தனூர் நங்கை ''என்று கூறுகிறது. கிழக்குச் சுவரின் அடியில் காணப்படும் கல்வெட்டு, முதல் இராசராசனின் நான்காவது ஆண்டிற்குரியது (கி.பி.989). அஃது அரிஞ்சய சதுர்வேதி மங்கலத்துப் பெருங்குழச் சபையோர்

அளித்த நிவந்தனைகளைக் கூறுகிறது. இக் கல்வெட்டில் கூறப்படும் செய்தி சிந்தனைக் குரியது.

**சாத்தனூர் நங்கை:**

''......எங்கள் பிடாரியார் சாத்தனூர் நங்கைக்கு நாள் திருவமுது வைத்துக் கொடுத்த படியாவது; உள்ளூர்ப் பிடாகையும் உணங்கல் பிடித்து இருநாழி உழக்கரிசி கொண்டு திரு வமுது காட்டுவேனாவேன். ஸ்தானம்உடைய பரத சிவனேன். இது "காளி கணத்தார் இரட்சை." என்று கூறுகிறது கல்வெட்டு. இதிலிருந்து சாத்தனூர் நங்கை என்னும் அன்னையை மாகாளத்துக் காளா படாரி, பிடாரி, காளி என்ற பெயர்களால் அழைத்தனர் என்றும் அறிகிறோம்.

சிவன் கோயில் கல்வெட்டுக்களின் முடிவு ''இது பன் மாகேசுவர ரட்சை'' என்பதாக இருக்கும். விஷ்ணு கோயில்களில், ''இது ச்ரீ வைஷ்ணவர் ரட்சை'' என்றும் காணப்படும். ஆனால் நங்கவரத்துச் சாத்தனூர் நங்கை, பிடாரி கோயில் கல்வெட்டின் முடிவு, ''இது காளி கணத்தார் ரட்சை'' என்பதாக உள்ளது. இதனால், காளி என்பதும், பிடாரி என்பதும் ஒன்றுதான் என்பதை அறியலாம். சைவர்கள் வைஷ்ணவர்கள் போன்று, காளி கணத்தார்'' என்னும் தனிக் கூட்டத்தினர் அன்னையின் வழிபாட்டில் பெரிதும் ஈடுபட்டிருந்தனர் என்று இதனால் அறிகிறோம். அவர்கள் காளி கோயி லின் நிர்வாகத்தை ஏற்றனர். மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் (கி.பி.1212) இவ் வூர் ''நங்கை பிரம்மதேயம் நங்கைபுரமாகி, இன்று நங்கவரமாகிவிட்டது. இப்பெயர் கல் வெட்டுகளில் கூறப்படும் சாத்தனூர் நங்கை என்னும் காளியையே குறிக்கும்.

**காளப்பிடாரி :**

தஞ்சை மாவட்டம் புள்ளமங்கைக்கிரா மம், பசுபதீச்சுரர் கோயிலில் உள்ள உத்தமச் சோழனின் கல்வெட்டும் (கி.பி973) ''நடுவிற் சேரி'' திருமணி மண்டபமுடைய காளப்பிடாரி என்னும் ஓர் காளி கோயிலைக் குறிக்கின்றயுது. இதனால் காளி கோயில், ஒரு மண்டபமாகச் சிறந்த கோயிலாகத் திகழ்ந்தது என்றும் அறி கிறோம். இதேபோன்று திருக்களாவூர் முல் லைவனநாதர் ஆலயத்தில் உள்ள பராந்தக னின் கல்வெட்டும் (கி.பி.934) காளப்பிடாரி கோயிலைக் குறிப்பிடுகிறது.

**மூகாம்பாள் :**

திருவிடைமருதூர் மகாலிங்கசுவாமி ஆல யத்தில் உள்ள சோழர் காலத்திய கல்வெட்டு ஒன்று சுவையான செய்தியைத் தருகின்றது. ஆலயத்தின் நான்காம் பிராகாரத்தில் கொலு வீற்றிருந்து அருள்பாலிப்பவள் ''பிடாரி யோகிருந்த பரமேஸ்வரி ''என்று கூறுகிறது. இக்கல்வெட்டு, பிடாரி என்னும் காளி, தவக் கோலம் பூண்ட வண்ணம், நான்காம் பிரா காரத்தில், தென்கிழக்குத் திசையில் வடக்கு நோக்கி வீற்றிருப்பதை இன்றும் காணலாம். இரு கால்களையும் மடித்துப் பத்மாசனம் பூண் டவள்; நான்கு திருக்கரங்கள்; இடது கையில் கபாலம்; தவக்கோலத்தில் உள்ள இவ்வன் னையை இன்று 'மூகாம்பாள்' என்று அழைக் கின்றனர். காலத்தின் கோலத்தில் மூகாம்பாள் மோகாம்பாள் ஆகி வருகின்றாள்! இவ்வூரில் அநேக பெண்களுக்கு மோகம், மோகாம்பாள் என்று பெயர் வைப்பதும் உண்டு.

**கலிங்கத்துப் பரணி:**

காளிக்கு எட்டு அல்லது நான்கு கரங்கள்; இடது கரத்தில் கபாலம்; மற்ற கரங்களில் ஆயுதங்கள். சிரசில் மண்டையோடு; மார்பகத் தில் மண்டை ஓட்டு மாலை; அவள் பாதங் களில் வீழ்ந்திருப்பவன் அஞ்ஞானம் என்னும் அசுரன். நான்கு கரங்களுடன் உள்ள பிடாரி பிற்காலத்தில் காளி, மாரியம்மன், சாமுண்டி என்று பலவாறாகப் பெயர் பெறுகிறாள். காளி யின் தத்துவம் மிக நீண்ட ஆராய்ச்சி. ஆனால் சோழமன்னர்களுக்கு அவள் போர்த் தெய்வம். போருக்குக் கிளம்பும் முன் பரணி நாளில் விழா எடுப்பர். ஒரு சிலர் தங்கள் தலையை அன்னை யின் முன் அரிவர். ''சலியாத தனியாண்மைத் தறுகண் வீரர் தருக வரம்'' என்பதாகக் கலிங் கத்துப்பரணி கூறும். சலியாத ஆண்மையும், வீரமும் அளிப்பாய் என்று வீரர் காளியை வழி பட்டனர். போரில் வெற்றி அடைய வேண்டிப் போருக்குச் செல்லும் முன் காளியை வழிபடுதல் சோழர் மரபு. எடுத்த காரியம் வெற்றிபெற, காளியை வணங்குவதற்குரிய சிறப்பான காலம் பரணி நாளே ஆகும்.

சப்த மாதர்கள் என்னும் ஏழுதேவியர் வழிபாடும் சோழர் காலத்தில் குறிப்பிடப்படு கின்றது. இத் தேவியர் முறையே சாமுண்டி (சிலர் அபிராமி என்பர்) மகேச்வரி, இந்திராணி வராகி, வைஷ்ணவி அல்லது நாரணி, பிராமி கௌமாரி என்னும் எழுவர் ஆவர்.

சென்னைக்கு அருகில் வேளச்சேரி என் னும் ஊரின், செல்லியம்மன் கோயிலில் உள்ள உத்தம சோழனின் கல்வெட்டு (கி.பி.974) இக் கோயிலின் அன்னையை ''காளாபடாரியார்'' என்று கூறும். மற்றொரு கல்வெட்டு பார்த்தி வேந்திரவன்மனுடையது (கி.பி.867). இக் கல்வெட்டில் சப்த மாதர்கள் குறிப்பிடப்படு கின்றனர். சப்த மாதங்களை அருச்சிப்போர் ''மாத்ருசிவர்'' என்று அழைக்கப்பட்டனர். பிடாரி கோயிலில் சப்த மாதர்களை எழுந் தருளிவிப்பது 10-ஆம் நூற்றாண்டிலிருந்து வழக்கத்தில் இருந்துள்ளது.

**சாமுண்டேசுவரி:**

திருச்சி மாவட்டம் ஆலம்பாக்கத்தில் பழைய பிடாரி கோயில் ஒன்று இன்றும் வழி பாட்டில் உள்ளது. இக்கோயிலில் உள்ள முதல் இராசராச சோழனது கல்வெட்டு, பிடாரியை யும் சப்தமாதர்களையும் குறிப்பிடும். கர்நாட

கத்தில் கோலார் நகரில் உள்ள கோலாரம்மா என்னும் ஆலயம் மிகப் பழமையானது. இவ் வாலயத்தில் இன்று வீற்றிருப்பவள் காளியே. இக் கோயிலில் ,முதல் இராசராசன் ,முதல் இராசேந்திரன் (1012-1033), முதல் குலோத் துங்கன் (1070-1122) ஆகிய மன்னர்களின் கல்வெட்டுக்கள் உள்ளன. மூலத்தானத்தில் இருப்பவள் ''சாமுண்டேசுவரி'' என்பதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. ஏனைய சப்த மாதர்களும் குறிப்பிடப்படுகின்றனர். சப்த மாதர்களின் பூசைக்குரிய நிவந்தங்கள் விடப் பட்டுள்ள செய்திகளை, ஆத்தூரில் முதல் இராசராசனின் கல்வெட்டிலும், எண்ணாயிரத் தில் முதல் இராசேந்திரன் கல்வெட்டிலும் காணலாம்.

**மாதரார் எழுவர்:**

கலிங்கத்துப் பரணியில் (கி.பி.1110), செயங்கொண்டார் மாதரார் எழுவர் (சப்த மாதர்) வணக்கம் செய்யுமிடத்து,

> ''மேதி புள்ளலகை தோகை யேறுவணம்
> வேழம் என்றகொடி ஏழுடைச்
> சோதி மென்கொடிகள் ஏழின் ஏழிரு
> துணைப்ப தந்தொழநி னைத்துமே!'

என்று கூறுவர். சப்த மாதர்களில் சாமுண்டிக்கு எருமையும், அபிராமிக்கு அன்னமும், வராகிக் கிக்கு அலகையும் (பேய்), கௌமாரிக்கு மயி லும், மகேசுவரிக்கு எருதும், நாரணிக்குக் கரு டனும், இந்திராணிக்கு யானையும் கொடிக ளாம்.

**சேட்டாதேவி:**

முதல் இராசராசன் காலத்திலிருந்தே சிவன் கோயில்களில் அட்டபரிவார தெய்வங் களை எழுந்தருளுவிக்கும் பழக்கம் நடைமுறை யில் இருந்தது. இத் தெய்வங்கள் முறையே சூரியன் சந்திரன் சப்தமாதர் கணபதி முருகன் சேட்டாதேவி (திருக்கேட்டை), சண்டேசர், பைரவர் ஆகிய எண்மர் ஆவர். சப்தமாதர் களை இன்றும் பல சிவாலயங்களில் காணலாம். ''சேட்டாதேவி'' (மூதேவி) வழிபாடு சோழர் காலத்தில் பிரபலமாக இருந்தது. இன்று அவ ளுக்கு உரிய இடத்தைத் திருமகள் ஆக்கிர மித்துக் கொண்டுள்ளாள். சேட்டம்-மூத்தது. கனிட்டம்-இளையது. சேட்டாதேவி, மூத்த தேவி. அது மூதேவி என மருவியது. இளைய தேவி, சீதேவி எனப்படும் திருமகள். திரு வள்ளுவர் திருமகளைச் செய்யவள் என்றும், மூத்த தேவியைத் தவ்வை (தமக்கை) என்றும் வழங்கியுள்ளார். சீதேவி என்னும் திருமகள் சிவந்த நிறம் உடையவள். மூதேவி கருநிறம் உடையவள். ''அவ்வித்து அழுக்காறு உடையா னைச் செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்' என்பது திருக்குறள்.

விகாரமான முகத்துடனும், பருத்த தனங் களுடனும், விரிந்த கால்களுடனும், சேட்டா தேவி காட்சி தருவாள். இடது பாகத்தில் மக ளும், வலது பாகத்தில் மிருகத்தின் தலையுடன் கூடிய மகனும் இருப்பர். காக்கைக் கொடியை உடையவள்; சேட்டாதேவியை இன்றும் அநேக ஆலயங்களில் காணலாம். காலத்தின் கோலத் தில் சேட்டாதேவி, வழிபாட்டில் இல்லாது போயினள். திருச்சி மாவட்டம் திருப்பராய்த் துறைச் சிவன்கோயிலில் உள்ள, முதல் இராச ராசனின் கல்வெட்டில் சில நிவந்தங்களைக் குறிப்பிடும் இடத்து, ''சப்தமாதர்களுக்கு மதியம் ஒருநாழி உழக்கு, கணவதி யாருக்கு இருநாழி, சுப்பிரமணியர்க்கு இருநாழி, திருக் கேட்டைக் கிழத்தி (சேட்டாதேவி)க்கு இரு நாழி, திருவடிகளுக்கு இருநாழி, துர்க்கையா ருக்கு இருநாழி, ஆதித்த பிடாரர்க்கு (சூரியன்) இருநாழி'' என்று சொல்லப்பட்டுள்ளது. சேட் டாதேவி ''திருக்கேட்டைக்கிழத்தி'' என்று குறிப்பிடப்படுகிறாள்.

**காத்தியாயநி:**

போர்த்தெய்வமாகிய காளி மூன்று நிலை களில் வணங்கப்பட்டாள். காத்தியாயநி, துர்க்கை என்பது அன்னையின் வேறு இரு கோலங்கள் ஆகும். சிம்மத்தின் மீது அமர்ந்து, எருமைத் தலையுடன் கூடிய மகிடாசுரனை, அழிக்கும் நிலையில் காட்சி அளிக்கும் அன்னை, காத்தியாயநி, என்று வணங்கப்படுகிறாள். அன்னை, ஞானத்தின் வடிவம். அவள் அஞ் ஞானமாகிய மகிடனை (எருமையை) அழிக்கின் றாள் என்பதே இதன்பொருள். அசுரனும் அழிந்தான். அன்னையும் மகிழ்ந்தனள். புன் னகை மலர, மகிடனின் தலைமீது (எருமைத் தலைமீது அதாவது அஞ்ஞான்த்தின்மீது)நின்று அருளும் வடிவமே துர்க்கை.

காத்தியாயநி எட்டு அல்லது இருபது கரங்களுடன் காட்சியளிப்பாள். சோழர் காலத்து 11 அல்லது 12-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததான காத்தியாயநியின் திருவுருவங்க ளைக் கங்கைகொண்ட சோழபுரம், திருவாஞ் சியம், அம்மன்குடி ஆகிய ஊர்களில் இன்றும் காணலாம். துர்க்கையைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? ''கோபேசகாளி சமரேசதுர்க்கா'' என்பது தியான சுலோகம். போருக்குச் செல் லும்போது மன்னனுக்கும் காளியை ஒத்த கோபமும், வீரமும் தேவை. மன்னன் போரில் வெற்றி அடைகிறான்; வெற்றியின் நிழல் சம ரசமே. வெற்றிக்குப் பிறகு தொடர்ந்து சம ரசம் நிலவத் துர்க்கையை வணங்கினர். சிவன் கோயிலில் துர்க்கையின் திருவுருவத்தைக் கர்ப் பக்கிரகத்தின் வடக்குச் சுவரில் காண்கிறோம். துர்க்கை, நான்கு, ஆறு அல்லது எட்டுக்கை களுடன் காட்சி தருகின்றாள். சில ஊர்களில் துர்க்கையின் இடது கையில் கிளியும் காணப் படும். கருணையையும், அன்பையும் எடுத்துக் காட்டி விளக்குவது கிளியின் உருவம். சோழ மன்னர்கள் துர்க்கையின் வழிபாட்டிற்கு நிவந் தங்கள் பல வழங்கிய செய்திகளைக் கல்வெட் டுக்கள் வாயிலாக அறிகிறோம்.

### தில்லைக்காளி :

காளி என்றவுடன் நம் நினைவுக்கு வருவது சிதம்பரம் தில்லைக் காளியே. தில்லையில் காளிக்கு இன்று தனிக்கோயில் இருக்க வேண்டு மல்லவா? ஆனால், அவள் இன்று தில்லையம் மன் கோயிலில் முன் மண்டபத்து வடமேற்கு அறையில் குடிபுகுந்து உள்ளாள். இதன் கார ணம் என்ன? தில்லையம்மன்கோயிலில் கோப் பெருஞ்சிங்கனின் கல்வெட்டுக்களே உள்ளன. இப்பல்லவ மன்னன், மூன்றாம் இராசராச சோழன், மூன்றாம் இராசேந்திரசோழன் காலத்தில் வாழ்ந்தவன். இவன் கி.பி.1243 லிருந்து 1279 வரை அரசாண்டான். தில்லை அம்மன் கோயிலில் உள்ள இம்மன்ன னது கல்வெட்டுக்கள் ,மூலத்தானத்தில் வீற்றி ருக்கும் அன்னையை ''தில்லை வனமுடைய பரமேசுவரி'' என்று கூறுகின்றன. இன்று நாம் காணும் இவ்வன்னை ''பிராமி'' ஆவாள். நான்கு தலைகளுடன், ஞானாசனம் இட்டு மேற்கு நோக்கி அமர்ந்து உள்ளாள். முன்மண் டபத்தில் தில்லைக் காளி கிழக்கு நோக்கிஉள் ளாள். காளி இக்கோயிலுக்கு உரியவள் அன்று. இவளுக்கென்று தனிக்கோயில் இருந்திருக்கிறது. இக்கோயிலில் முன் மண்டபத்து வடக்குச் சுவ ரின் அடியில் காணப்படும் கோப்பெருஞ்சிங்க னின் கல்வெட்டு (1248) ''பிடாரி வடவாயில் செல்வி'' என்று குறிப்பிடுகிறது. பைரவர் கோயிலின் வடக்குச் சுவரில் உள்ள கோப் பெருஞ்சிங்கனுடைய கல்வெட்டின் வரி எட்டு; ''விக்கிரம சோழன் தெற்குத் திருவீதியில்தென் பக்கத்து எழுந்தருளியிருக்கிற பிடாரியாருக்குக் கோயிலும் திருமுற்றமாக விற்றுக் கொடுத்த நிலமாவது ..'' என்று கூறுகிறது. காலத்தின் கோலத்தால் அப்பிடாரியே (காளி) இன்று தில்லையம்மன் கோயிலில் குடியேறினளோ என்ற ஐயம் தோன்றுகின்றது.

### ஒட்டக்கூத்தர் :

ஒட்டக்கூத்தர் இரண்டாம் இராசராச சோழ மன்னனின் அவைப் புலவர். மன்னன் இராசராசேச்சுரம் என்னும் (குடந்தை அரு கில் உள்ள தாராசுரம்) கோயிலை எடுப்பித் தான். (கி.பி.1167). இராசராசேச்சுரத்துப் பெருமான்மீதும், மன்னனின் வீரத்தைக் குறித் தும் பாட விரும்பிய கூத்தர், தக்கயாகப் பர ணியை இயற்றினார். இதில் தக்கன் அழிவு கூறப்படுகிறது. கூத்தர், இந்நூலில் அன்னை வழிபாட்டின் சித்தாந்தத்தை அழகுற எடுத் துரைப்பார். அன்னையின் பல கோலங்கள் கூறப்படுகின்றன. இந்நூலில் கூறப்படும் அன் னையின் பல பெயர்களுக்குரிய திருவுருவங் களை இரண்டாம் இராசராசன் ,கோயிலின் கீழைக்கோபுரத்தில் பதித்தான். ஒவ்வொரு உருவத்திற்கும் கீழே அன்னையின் பெயரை யும் செதுக்கினான். ஆனால் இன்று பாழ்பட்டு நிற்கும் இக்கோபுரத்தில் அன்னையின் உருவங் களைக் காணோம். பெயர்கள் மட்டுமே காணப்படுகின்றன. அவை முறையே, இரில்லே ககதேவி, கங்காதேவி, யாமுனாதேவி, உருத் திராணி, வைணவி, பிராம்மணி, சாந்தியாதீ தசக்தி, சாந்திசக்தி, வித்தியாசக்தி, பிரதிட்டா சக்தி, சீதேவி, துர்க்காதேவி என்பன ஆகும்.

### கொற்றவை :

துர்க்கை திருமாலின் அம்சம். துர்க்கை யைக் கொற்றவை என்றும் கூறுவர். இதனைத் தக்கயாகப் பரணியில் ஒட்டக்கூத்தர் (கி.பி. 1172), அழகுற எடுத்துரைப்பார். அன்னையை 'விஷ்ணுமாயா' என்பதாகச் சித்தரிக்கின்றார். சில விஷ்ணு கோயில்களில் துர்க்கை கொலு வீற்றிருப்பதை இன்றும் காணலாம். தஞ்சை மாவட்டம், மன்னார்குடி இராசகோபால சுவாமி ஆலயம், அக்காலத்தில் ''இராசாதிராச சதுர்வேதி மங்கலத்துக் குலோத்துங்கசோழ விண்ணகர், எம்பெருமான்கோயில்'' என்று அழைக்கப்பட்டது. இப்பெயர், முதல் குலோத்துங்கனின் பெயரைத் தாங்கி உள்ளது (1070-1122). மூன்றாம் இராசேந்திரசோழன் காலத்தில் (1267), சீமத் துவாரகாபதி எம் பெருமான் (கிருஷ்ணன்) என்று, பெருமான் அழைக்கப்பட்டார். இவ்வாலயத்துக் கருவ றையின் வடக்குச் சுவரில் சோழர் காலத் துர்க் கையின் திருவுருவம் ''விஷ்ணுமாயா'' என்று வழிபாட்டில் உள்ளதை இன்றும் காணலாம். இதே போன்று திருக்கோவலூர் உலகளந்த பெருமாள் கோயிலின் அர்த்தமண்டபத்தின் முகப்பிலும், துர்க்கையை வழிபடுகின்றனர்.

### தாட்சாயணி :

கூத்தரின் காலத்தில், வங்காளத்திலிருந்து வந்த கோளகி மடத்துக் குருமார்கள் (அந்த ணர்கள்) பலர், சோழ நாட்டில் இருந்தனர். இவர்களில் சிலர் தேவி வழிபாட்டிலும் ஈடு பாடு கொண்டிருந்தனர். வங்காளத்துத் தக்க யாகப் புராணத்தில் தட்சனின் புதல்வியாகத் தோன்றிய தாட்சாயணியின் பல கோலங்கள் காணப்படுகின்றன. அவளது உடலின் ஒவ் வொரு அங்கமும் சக்தியின் வேறுவேறு கோல மாக வர்ணிக்கப்படுகின்றது. சக்தி, தசவித்யா என்றும் சாக்தத்தில் கூறப்படுகிறாள். பத்துத் தேவியரும் முறையே காளி, தாரா, சோடசி, புவனேசுவரி, பைரவி, தூமவதி, பகளா, மாதங்கி, கமலா எனப்படுவர். இத்தேவியர் சிலரையும், தாட்சாயணியின் சிறப்புப் பற்றி யும், கூத்தர் விரிவாகத் தக்கயாகப் பரணியில் எடுத்துரைத்திருக்கிறார்.

### கமலதேவி:

வங்காளத்திலும், அசாம் எனப்படும் காம ரூபத்திலும், தேவியைப் பிரசண்ட சண்டிகா, கமலா என்று வணங்கினர். இத் தேவியின் உருவத் திருமேனி ஒன்று, தாந்திரிக வழிபாட் டில் இன்றும் குடந்தை அருகே தாராசுரத்தில் உள்ளது. இன்று அன்னையின் ஆலயம் சக்ராயி கோயில் என்று அழைக்கப்படுகிறது. சமீபத் தில் இக்கோயிலின் மூலத்தானத்தின் திருவுரு வத்தைக் காணும்பேறு பெற்றேன். அன்னையின் உருவம் ஐந்து அடிக்கு நான்கு அடி அளவுள்ள கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. நிர்வாணக் கோலத்தில் அன்னை உட்கார்ந்த நிலையில் உள்ளாள். சிரசு இல்லை; அவ்விடத்தில் தாமரை மலர் உள்ளது. இரு கரங்களாலும் தாமரையைப்

